சிவமயம்

# குமரகுருபரன்



மலர் 19 ] 1968-௵ கார்த்திகை ௴ 1-ம் ௳ (16-11-68) [ இதழ் 11

தனிப்பிரதி 25 பைசா வருடச் சந்தா ரூ. 3-00

## உள்ளுறை


| | | பக்கம் |
|---|---|---|
| 1. | சிதம்பர மும்மணிக்கோவை ... | 513 |
| 2. | கந்தர்சஷ்டி கவசம் ... | 516 |
| 3. | இன்சொல் தரும் இன்பம் ... | 520 |
| 4. | திருமந்திரம் (Tirumantiram ஆருந்தந்திரம்) ... | 523 |
| 5. | இறைவன் கருணை ... | 524 |
| 6. | திருவாசக அநுபூதி உரை .... | 528 |
| 7. | வேண்டாமடா (காலா)! ... | 529 |
| 8. | நம்பியாரூரன் நாம்தொழும் தன்மையான் ... | 532 |
| 9. | Hymns of the Tamil Saivite Saints ... | 542 |
| 10. | மணிவாசகரின் மாண்புறு உவமைகள் ... | 543 |
| 11. | கண்ணுக்கினியனைக் கருதிப் பாடுவோம் ... | 545 |
| 12. | காலக்கணிதம் ... | 548 |
| 13. | அப்பரும் அமணரும் .... | 555 |
| 14. | சிதம்பரத்தில் பாண்டிநாயகம் நந்தனவன பராமரிப்பு நிதி வைப்பெருமானம் ரூ. 20200. | 558 |

உ
சிவமயம்
திருச்செந்திலாண்டவன் துணை


# குமரகுருபரன்

மலர் 19 | கீலக ஹு கார்த்திகைத் திங்கள் 1-ம் உ [16-11-68] | இதழ்-11


# சிதம்பர மும்மணிக்கோவை

## உரைநடை


சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர்,
பாலகவி
**திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,**
தேவகோட்டை.



*( மலர் 19 இதழ் 10-ன் தொடர்ச்சி )*


மின்வீழ்ந் தன்ன விரிசடைக் காட்டிற்
பன்மாண் டுத்திப் பஃறலைப் பாந்தட்
சிறுமுச்சிற் பிறந்த பெருங்காற் றடிப்ப
விரிதிரை சுருட்டும் பொருபுனற் கங்கை
படம்விரித் தாடுமச் சுடிகைவா ளரவின்
அழற்கண் கான்றவவ் வாரழல் கொளுந்தச்
சுழித்துள் வாங்கிச் சுருங்கச் சுருங்காது

திருநுதற் கண்ணிற் றீக்கொழுந் தோட
உருகுமின் னமுத மூவெட்டெழுந் தோடியக்
கங்கை யாற்றின் கடுங்கரப் பொழிக்கும்
திங்களங் கண்ணித் தில்லை வாண
அன்பருக் கெளியை யாகலி னைய
நின்பெருந் தன்மை நீயே யிரங்கி
உண்ணின் றுணர்த்த வுணரி னல்லதை
நுண்ணூ லெண்ணி நுணங்க நாடிப்
பழுதின் றெண்ணிப் பகர்து மியாமெனின்
முழுது மியாரே முதுக்குறைந் தோரே
நால்வகைப் பொருளு நவையறக் கிளந்த
வேத புருடனு மியாதுநின் னிலையெனத்
தேறலன் பலவாக் கூறின னென்ப, அதா அன்று
முன்னோநான் மறையு முறைப்பட நிறீஇய
மன்னிருஞ் சிறப்பின் வாதரா யணனும்
கையிழந் தனனது பொய்மொழிந் தன்றோ, அதனால்
தெளிவில் கேள்வியிற் சின்னூ லோதி
அளவா நின்னிலை யளத்தும் போலும்
அறிவு மாயுளுங் குறையக் குறையாத
பையுளோ டெண்ணில படைத்துப்
பொய்யுடல் சுமக்கும் புன்மை யோமே. (17)

மின்னல் வந்து அடைந்ததைப் போன்ற விரிந்த சடையாகிய காட்டில் பலவகைப் பட்ட அழகிய புள்ளிகளை உடைய பல தலைகளைக் கொண்ட பாம்புகளினது சிறிய மூச்சிலிருந்து உண்டான பெரிய காற்று வீச விரிந்த அலைகளைச் சுருட்டும் மோதுகின்ற நீரை உடைய கங்கையாறு, படம் விரித்தாடுகின்ற அந்த உச்சி மாணிக்கத்தையுடைய நீண்ட பாம்பினது தீப்போன்ற கண்கள் கக்கிய பெரிய நெருப்புச் சுட அதனால் சுழித்து உட்சென்று சுருங்கிவிடச் சுருக்கத்தை அடையாது அழகிய நெற்றிக் கண்ணிலிருந்து தீக்கொழுந்து எழும்ப அதனால் உருகுகின்ற இனிய அமுதம் பெருக்கெடுத்து ஓடி அந்தக் கங்கையாற்றின் பெரிய வறுமையை நீக்குகின்ற அழகிய பிறைத்திங்கட் கண்ணியைச் சூடிய தில்லையில் வாழ்பவனே! அன்பர்களுக்கு நீ எளியவனுதலின் ஐயனே நினது பெரிய தன்மையை நீயே இரக்கங் கொண்டு உள் நின்று ணர்த்த அதனால் உணர்ந்து கொள்ளலாகுமேயன்றி நுண்ணிய

நூற்கருத்துக்களை எண்ணி நுட்பமாக ஆராய்ந்து குற்றங்களற்றவற்றைக் கண்டு யாம்சொல்லுவோம் என்றால் முழுவதும் அறிந்த அறிஞர் யார் உள்ளனர் ? அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள்கள் நான்கினையும் குற்றமற எடுத்துச் சொல்லிய வேத புருடன் கூட நினது நிலைமை யாது எனத் தெளியாதவனாய், பலபடக் கூறினானென்று சொல்லுவர். அது மட்டுமோ ? பழைய வேதங்கள் நான்கினையும் முறைப்பட வகுத்த நிலைபெற்ற பெருஞ் சிறப்பையுடைய வியாச முனிவன் கூட முன்னொரு நாளில் காசித் திருத்தலத்தில் திருமாலே முதல்வன் என்று பொய்மொழி கூறித் தனது கையைத் தூக்க அது தூக்கியபடியே நிற்கும் சாபத்தைப் பெற்றான். அதனால் தெளிவுபடாத கேள்வியில் சில நூல்களை மட்டும் ஓதி அளக்கமுடியாத நினது நிலைமையை அறிவும் ஆயுளும் குறைந்திருப்பக் குறையாத உடலுள்ளூறு நோய்கள் பலவற்றைக் கொண்டு பொய்யான உடம்பைச் சுமக்கும் புல்லியர்களாகிய யாம் அளந்து சொல்ல முடியுமோ?.

**புனையேந் தருவுதவு பொன்னரி மாலை**
**வனையேம் பசுந்துழாய் மாலை — பனிதோய்**
**முடிக்கமலஞ் சூடினேன் மொய்குழலோ டாடும்**
**அடிக்கமலஞ் சூடினே மால். (18)**

குளிர்ச்சி பொருந்திய கங்கை ஆற்றைத் திருமுடியில் சூடிய சிவபெருமான்,நெருங்கிய கூந்தலையுடைய உமாதேவியாருடன் ஆனந்தக் கூத்தாடுகின்ற திருவடித் தாமரைகளை எமது முடியிலே சூடிக் கொண்டோம். அதனால் கற்பக மரம் தருகின்ற பொன்மலர் மாலையைச் சூட மாட்டோம். பசிய துழாய் மாலையையும் அணிய மாட்டோம்.

**சூடுங் கலைமதி யைத்தொட ராதுபைந் தோகைக்கஞ்சா**
**தோடும் பொறியர வொன்றுகெட் டேன்மறை யோலமிட்டுத்**
**தேடும் பிரான்திருக் கூத்தினுக் கேமையல் செய்யுமென்றும்**
**ஆடுந் தொழில்வல்ல தாகையி னாலவ் வருமைகண்டே. (19)**

எப்பொழுதும் ஆடுந் தொழில் வல்லமையுடையது. ஆகையினால் அவ்வாட்டத்தின் அருமையைக்கண்டு சடையிற் சூடியிருக்கிற கலைகளை உடைய திங்களைத் தொடாமலும் பக்கத்திலுள்ள சிவகாமி ஆகிய பசிய மயிலுக்கு அஞ்சாமலும், புள்ளிகளை உடைய பதஞ்சலி முனியாகிய பாம்பு ஒன்று வேதங்கள் ஓலம் இட்டுத் தேடும் சிவபெருமானது திருக் கூத்துக்கே விருப்பம் வைக்கும்.

---

(தொடரும்)

# கந்தர் சஷ்டி கவசம்

**திரு. K. M. வேங்கடராமையா, அவர்கள் M. A.,**
**திருப்பனந்தாள்.**

---

"சேயோன் மேய மைவரை யுலகம்" என்றார் தொல்காப்பியர். இதனால் குறிஞ்சிநிலக் கடவுள் முருகன் என்பது பெறப்படும். குன்றுகள் தோறும் அமர்ந்த பெம்மானாகிய முருகப்பெருமான் செஞ்ஞாயிறு போன்று தோற்றமளித்து மன்பதைகட்கு அருள் புரிகிறார். அவரது அருளைப் பெறுதற்குரிய தோத்திர நூல்கள் பல உண்டு. அவற்றுட் சில— நக்கீரர் அருளிய திருமுருகாற்றுப்படை, ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிய கந்தர்கலிவெண்பா, அருணகிரியார் அருளிய கந்தர் அலங்காரம், கந்தர் அனுபூதி, தேவராயர் அருளிய கந்தர் சஷ்டி கவசம் என்பனவாம்.

"கந்தர் சஷ்டி கவசம்" என்பது முருகபக்தர் பலராலும் நாடோறும் பாராயணம் செய்யப்பெறும் தோத்திரப் பனுவல்களுள் ஒன்றாகும். "கவசம்" என்பது சட்டை என்று பொருள்படும். போர்க்குச் செல்பவர் கவசம் அணிந்தால் உடலுக்கு ஊறுபாடின்றிப் பொருவர். அதுபோன்று இத்தோத்திரப் பாடலாகிய கவசத்தைப் பாராயணம் செய்யின் உடலுக்குரிய புறப்பகைகள் ஒன்றும் செய்யமாட்டா; உட்பகைகளும் அடங்கும்; இம்மைப்பயன்கள் வந்துறும்; மறுமைப்பயன் – திருவருளைப் பெறலாம். இவற்றை இந்நூல் காப்புச்செய்யுள் இனிது பகர்கின்றது:—

துதிப்போர்க்கு வல்வினைபோம் துன்பம்போம் நெஞ்சில்
பதிப்போர்க்குச் செல்வம் பலித்துக் — கதித்தோங்கும்
நிஷ்டையும் கைகூடும் நிமலர் அருள்கந்தர்
சஷ்டி கவசந் தனை.

இந்நூலில் முருகப்பெருமான் சரவணபவன், சிஷ்டருக்குதவும் செங்கதிர்வேலோன், மயில்வாகனன், வாசவன் மருகன், குறமகள்நினைவோன், நீறிடும்வேலவன், கார்த்திகை மைந்தன், சிரகிரிவேலவன், சரஹணபவன். குகன், ஏரகச் செல்வன். தணிகாசலன், கதிர்காமத்துறைகதிர்வேல் முருகன், பழநிப்பதிவாழ் பாலகுமாரன், ஆவினன்குடிவாழ் அழகிய வேலன், செந்தின் மாமலையுறும் செங்கல்வராயன், சமராபுரி வாழ் சண்முகத்தரசு — என்றின்னோரன்ன சொற்றொடர்களால் குறிக்கப்பெறுகிறார்.

முருகப் பெருமானின் வேல் பலபடித்தாகக் குறிக்கப் பெற்று இருக்கிறது. ''மந்திர வடிவேல்'' என்பது ஒன்று. வேலைப்பகைவர் மீது ஏவும் பொழுது மந்திரம் ஜபித்து ஏவப் படுவது என்றோ, மந்திர வடிவாக இருந்து பகைவரை அழிப்பது என்றோ பொருள்படும். இனி, அழகுவேல், புனித வேல், நல்வேல், பெருவேல், முனைவேல், செவ்வேல், வடி வேல், கதிர்வேல், இனியவேல், திருவேல், அருள்வேல், பரு வேல், வெற்றிவேல், அயில்வேல், வல்வேல், கருணைவேல், முரண்வேல், எதிர்வேல், கனகவேல், வச்ரவேல், சமர்வேல்- என்றும் வேல் கூறப் பெற்றுள்ளது.

வரி 107 முதல் 157 வரையில் பேய், பூதம், சூனியம், பிணி, பகை, பல துட்ட மிருகங்கள், கடிவிஷம் முதலிய வற்றால் நேரும் வாதனைகள் வாராவண்ணம் காக்கவேண்டும் என்று கூறியுள்ளது.

வரி 62 முதல் 95 வரை உடலுறுப்புக்கள் எல்லாவற்றையும் வேல் காத்தருளுவதாகுக என்றுள்ளது.

> ''ரஹண பவச ரரரர ரரர
> ரிஹண பவச ரிரிரிரி ரிரிரி
> விணபவ சரஹ வீரா நமோநம
> நிபவ சரஹண நிறநிற நிறென
> வசா ஹணப வருக வருக ''

(வரி 17–21) என்றவற்றுள் முதல் இரண்டு வரிகளில் வந்துள்ள ஒவ்வொரு எழுத்தும் பீஜாட்சரம். முதல்வரி ''சரஹணபவ'' என்பதும், அடுத்தவரி ''சரிஹணபவ'' என்

பதம் மாறிவந்த ஷடாக்ஷரங்களும், ஷடாக்ஷரிகளும் ஆம். இதில் கடைசிவரியில் உள்ள ''வசரஹணப'' என்பது மாரண சக்கரத்தின் அமைப்பு என்று கூறுவர். இவையெல்லாம் மந்திர சாத்திர நுட்பங்களை அடிப்படையாகக் கொண்டவை. இங்ஙனம் முருகப் பெருமானைத் துதித்தால் வறுமைபோம்; வல்வினை அணுகா என்றும் அறிஞர் கூறுவர்.

" ஐயும் கிலியும் அடைவுடன் சௌவும்
உய்யொளி சௌவும் உயிரையும் கிலியும்
கிலியும் சௌவும் கிளரொளி ஐயும்
நிலைபெற்று என்முன் நித்தமும் ஒளிரும்
சண்முகன் தீயும் தனியொளி ஒவ்வும்
குண்டலி யாம்சிவ குகன்தினம் வருக ''

என்ற (27-32) இவ்வரிகளில் பீஜாக்ஷரங்கள் கூறப்பெற்றுள்ளன. 'ஐம் - கிரிம் சௌம்' என்பன பீஜாக்ஷரங்கள். இங்குக் கூறியுள்ள பீஜவடிவில் ஓதினல் முருகப்பெருமான் அவ்வடிவில் தோன்றியருளுவன். இதில் ''தனியொளி ஒவ்வும்'' என்றது ஒப்பற்று விளங்கும் பிரணவமாகிய ஓங்காரமாகும்.

வரி 33 முதல் 44 வரை கேசாதிபாதம் கூறப்பெற்றுளது'

''செககண செககண செககண செகண
மொகமொக மொகமொக மொகமொக மொகென
நகநக நகநக நகநக நகென
டிகுகுண டிகுகுண டிகுகுண டிகுண
ரரரர ரரரர ரரரர ரரர
ரிரிரிரி ரிரிரிரி ரிரிரிரி ரிரிரி
டுடுடு டுடுடு டுடுடு டுடுடு
டகுடகு டிகுடிகு டங்கு டிங்குகு
விந்து விந்து மயிலோன்''

என்ற (47 – 56) இவ்வரிகளிலும் சில ஒலிக்குறிப்புக்களும் மந்திர எழுத்துக்களும் கூறப்பெற்றுள்ளன. ''செக கண'' என்பது உலகத்தோடு பொருந்தியிருப்பவன் என்று பொருள்படும். அதாவது இவ்வுலகில் பல தலங்களிலும் கோயில் கொண்டிருப்பவன் என்பது கருத்து. ''மொக மொக-நகநக'' என்பவை "ஒலி – பிரகாசம்'' உடையவன் என்று பொருள்

படும். ''ரர - ரிரி'' முதலியன ஷடாக்ஷரத்தை நினைவூட்டும். எனவே முருகப் பெருமான் எல்லாவற்றுக்கும் தாது அதாவது வித்தாக விளங்குபவன் என்று விளங்கும்.

இக்கந்தர் சஷ்டி கவசத்தை உடல்தூய்மை செய்து கொண்டு - ஆசாரத்துடன்-விருப்பத்துடன்-ஒரே நினைவாய்-சிந்தை கலங்காமல் - முப்பத்தாறு தடவை ஓதல் வேண்டும் என்று 203 முதல் 208 வரிகளில் சொல்லியிருக்கிறது. இங் ஙனம் ஓதின்,

> ''அஷ்டதிக் குள்ளோர் அடங்கலும் வசமாய்த்
> திசைமன்னர் எண்மர் செயல தருளும்
> மாற்றலர் எல்லாம் வந்து வணங்குவர்
> நவகோள் மகிழ்ந்து நன்மை யளித்திடும்
> நவமதன் எனவும் நல்லெழில் பெறுவர்
> எந்த நாளும் ஈரெட்டா வாழ்வர்''.

நக்கீரர் சொன்ன நன்முருகாற்றுப்படை சங்கத்தமிழின் சொல்வளம் - சொன்னடை கொண்டது. ஸ்ரீ குமரகுருபரர் அருளிய கந்தர் கலிவெண்பா சைவசித்தாந்த சாத்திரப்பிழி வாய் - வாக்குவளம் பொருந்தியதாய் உள்ளது. கந்தர் சஷ்டி கவசம் அவற்றோடு ஒப்பதன்று ஆயினும், கற்றோர்க்கு அன்றி மற்றோர்க்கும் ஓதற்கெளிதாய் இருத்தலின், இந்நாளில் பல்லோரும் பாராயணஞ் செய்கின்றனர். சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லின் நலன்மிருக்கும் என்று கருதி இச்சிறு விளக்கக் குறிப்புத் தரலாயிற்று.

> ''அமரர் இடர்தீர அமரம் புரிந்த
> குமரனடி நெஞ்சே குறி''.

---

# இன்சொல் தரும் இன்பம்

வித்துவான் திரு. கோ. கோவிந்தசாமி அவர்கள்,
தமிழாசிரியர்,
இந்து தியலாஜிகல் உயர்நிலைப்பள்ளி,
சென்னை - 1.

---

இனிய சொற்கள் என்றும் இன்பம் பயக்கும். பிறர் மனம் புண்படுவதற்குக் காரணமாக இருப்பது வன்சொற்களே யாகும். நாம் எச்செயலையும் இனிய சொற்களின் மூலம் மிக விரைவில் செய்து முடிக்க இயலும். வன்சொற்களின் மூலம் எச்செயலையும் செய்ய இயலாது.

ஐந்து அகவையும் நிறைவுறாத இளஞ்சிறுவன் ஒருவனை அழைத்து, தம்பி ... எனக்கு ஓர் உதவிசெய் என்று பணி ஒன்றினை இடின் அவன் அப்பணியைத் தயங்காது செய்ய முற்படுவான். மாறாக....ஏ...மூடா... உடனே நான் இடும் பணியைச்செய் எனக் கடுகடுப்புடன் கூறின் அப்பணியை இறுதிவரை செய்ய முற்படான். சிறுவன் மட்டுமன்று... நம்மிடம் பழகும் எவரிடமும் இன்சொற் கூறின் அது நமக்கு நன்மையை விளைவிக்கும். ஆனால் மாந்தர் இன்சொல் கூறுவதைத் தவிர்த்து வன்சொல் கூறுகின்றனர். இன்சொல் இன்பம் தரும் என்பதை உணர்ந்தும் அவ்விதம் கூறுவது யாது காரணத்தால்.

> ''இன்சொலால் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
> வன் சொல் வழங்குவது ''

என்கிறார் வள்ளுவர் பெருந்தகை.

இன்சொற்கள் இயம்புவது நன்று என உணர்ந்திருந்தும் சிலர் தமக்குக் கீழுள்ள எளியவரிடம் கடுஞ்சொற்கூறி அவர்களைத் துன்புறுத்துகின்றனர்; தீயினாற் சுட்டபுண் விரைவில்

ஆறிவிடும். ஆனுல் நாவினுற் சுட்டவடு என்றும் ஆருது என அறிந்தவர்கள் பிறரிடம் கடுஞ்சொற் கூறுவது இனிய கனி இருக்க அதனை உண்ணுது இன்னுத காயைத் தின்னும் செயலையே ஒக்கும். இன்சொல் தனக்கு உளவாயிருக்கக் கடுஞ்சொல் கூறுவதை,

" இனிய உளவாக இன்னுத கூறல்
கனிஇருப்பக் காய் கவர்ந்தற்று "

என நவில்கிறது தமிழ் மறை.

அறம் செய்தல் சிறந்தது எனக்கூறும் சிலர்தாம் அறம் செய்ய முயலும்போது தம் கடுமையான முகத்துடன் மீண்டும் தம்மை எவரும் அணுகாதவாறு தோன்றுவர். எளியோர் அவரைக் கண்டதும் அஞ்சி எதையும் அவரிடம் கேட்க விழையாது விரைந்து சென்றுவிடுவர். முகத்தில் கடுமை தோன்றச்செய்யும் அறம் அறமன்று. தம்மை நாடிவருப வர்களை இன்முகத்துடன் வரவேற்று, இனிதாக நோக்கின் அதுவே ஓர் அறமாகும். முகம் மலர்ந்து இனிய சொற்களைச் சொல்வது மனமகிழ்வுடன் அளிக்கும் ஈகையை விட நன்ருகும்.

"முகத்தானமர்ந்து இனிது நோக்கி அகத்தானும்
இன் சொலினதே அறம்"

ஒருவற்கு அணியாவது, பணிவு உடையனுதலும், இன் சொல்லை உடையனுதலுமேயாம். பிற அணிகள் அணியாகா.

"பணிவுடையன் இன்சொலனுதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற "

பிறர்க்குத் துன்பத்தை உண்டாக்காத இன்சொல் ஒரு வற்கு இம்மை, மறுமையின் பங்குகளைத் தரும்.

"சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பந் தரும்"

வேழத்தில் பட்டு உருவும் அம்பானது பஞ்சின்மேல் பாயாது. நெடிய இருப்புப் பாரைக்குப் பிளவாத கருங்கற் பாறையானது பசு மரத்தின் வேருக்குப் பிளந்துவிடும். அதே போல் வன்சொல்தோற்கும் இன்சொல் வெல்லும் என்பதை,

> வெட்டெனவை மெத்தனவை வெல்லாவாம் வேழத்தில்
> பட்டுருவும் கோல்பஞ்சிற் பாயாது – நெட்டிருப்புப்
> பாரைக்கு நெக்குவிடாப்பாறை பசுமரத்தின்
> வேருக்கு நெக்கு விடும்.

என இயம்புகிறது நல்வழி.

குயில் கூவுவதைக் கேட்டு மகிழும் இவ்வுலகம் கர்த்த பத்தின் ஓசையைக் கேட்டு அறுவறுக்கிறது. குயில் உல கிற்குச் செய்த நன்மையாது? கர்த்தபம் செய்த தீமையாது? என்பதை ஆராயப்புகின் குயிலின் இனிய ஓசையை விரும்பும் உலகம் கர்த்தபத்தின் ஓசையைக்கேட்டு வெறுப்படைவதே காரணமாகும்.

> மென் மதுர வாக்கால் விரும்பும் சகம் கடின
> வன் மொழியாலிகழும் மண்ணுலகம் - நன்மொழியை
> ஓது குயிலேதங் குதவியது கர்த்தபந்தான்
> ஏதபராதஞ் செய்த தின்று

என்று கூறுகிறது நீதிவெண்பா.

ஒருவற்கு ஒன்று ஈய இயலாது போயினும், இன்சொல் லேனுஞ் சொல்லாதொழியின் அது பெருந்தீவினையாய் முடி யும் என்பதை,

> "ஈகை யரிதெனினும் இன்சொலினும் நல்கூர்தல்
> ஓ ஓ கொடிது கொடிதம்மா – நாகொன்று
> தீவினைக் கம்மியனால் வாய்ப்பூட் டிடப்படின்மற்
> றுவா விவரென் செய் வார்"

என அறிவுறுத்துகிறது நீதிநெறி விளக்கம்.

"இன்சொலால் அன்றி இருநீர் வியனுலகம் வன்சொ லால் என்றும் மகிழாதே" என்ற ஆன்றோர் கூற்றுக்கிணங்க இன்சொல் கூறுதலால் அடையும் இன்பத்தைத் தெளிவாக அறியலாம்.

---

# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஆறாந்தந்திரம் Tantra the Sixth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,

---

( மலர் 19. இதழ் 10-ன் தொடர்ச்சி )

### மனம் அவனை அடையும்போது, இறை தானாகவே தோன்றும்

### When the mind reacheth the Lord, He of Himself revealeth.

67. பின்னெய்த வைத்ததோர் இன்பப் பிறப்பினை
முன்னெய்த வைத்த முதல்வனை எம்மிறை
தன்னெய்துங் காலத்துத் தானே வெளிப்படும்
மன்னெய்த வைத்த மனமது தானே.

The life of bliss to be hereafter
He made me reach now and here,
He — the Primal One:
When the mind transfixed reacheth God,
He of Himself revealeth, sure.

இறந்தபின் அடையக்கூடிய முத்தியின்பத்தை இவ்வுலகில் இருக்கும்போதே என்தலைவன் என்னை அடைய வைத்தான். உறுதிகொண்ட தவசியரது மனம் முதல்வனை அடையும்பொழுது, அவன் தானாகவே காட்சி அளிக்கின்றான்.

குறிப்பு. இது முன் 14-வது பாட்டாகவும் வந்துள்ளது. திருமூலர் சிவன் முத்தி அடைந்தது கூறப்பட்டது. இடம் நோக்கி சற்று பொருள்வேறுபட, மொழிபெயர்ப்பும் உரையும் ஏற்ப அமைக்கப் பட்டன.

---

(தொடரும்)



# இறைவன் கருணை

திரு. மா. மாரிகோவிந்தன் அவர்கள்,
தமிழ் ஆசிரியர், உ. பெ. மு. ஆ. பள்ளி,
புதுகூரைப்பேட்டை.

---

உலகில் தோன்றிய ஒவ்வொருவருக்கும் இறைவனுடைய கருணையைப் பெறவேண்டுமென்கிற எண்ணம் உண்டே தவிர அதைப் பெறுவதற்கேற்ற வழிவகைகளைத் தேடினூர்கள் இல்லை. இறைவன் கருணை இமயம் போன்றது. அதை எட்டிப்பிடிக்க வேண்டுமானுல் பல வழிகள் உண்டு. அவை வறியவர்களின் வயிற்றை நிறப்பல், புலை, கொலை, களவு, கள், காமம், என்ற ஐந்து பஞ்சமா தொழிலைச் செய்யாதிருத்தல், தவம், ஜெபம், சமய வழிபாடு முதலியன செய்தல். ஆகவே இறைவன் கருணையை நாம் பெறவேண்டுமானுல் நாம் முதலில் கருணையுடையவராக இருத்தல் அவசியம். மானை மான் காட்டிப் பிடித்தல் போலே ஏழை எளியவர்களின் இன்னலைத் தீர்த்தால் இறைவன் கருணையை எளிதில் பெறலாம். எனவே பிற உயிர்களுக்கு நம்மால் இயன்ற அளவு உதவி புரிதல் வேண்டும்.

> யாவர்க்குமா மிறைவர்க்கொரு பச்சிலை,
> யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை
> யாவர்க்கு மாமுண்ணும்போது ஒருகைப்பிடி,
> யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரைதானே

என்பது திருமூலர் வாக்கு. ஓரறிவு உடைய முல்லைக்கொடி தாவிப் படர வழியின்றி தவிக்கும் நிலையில் கண்ட பாரி மன்னன், தன் தேரை நிறுத்தி அதன்மீது முல்லைக்கொடியை ஏற்றி அதற்கு வேண்டிய பல உதவியும் புரிந்து நடந்தே சென்ருன் எனில் அவனுடைய கருணை எத்துணை விழுமியது.

ஒரு தலைவன் அயலூர் சென்று தன் கருமம் முடிந்து அவனுடைய தலைவியை நினைந்து காதல் வெள்ளம் கரைபுரள

வீட்டிற்குத் தேரில் புறப்படுகிருன். வழியின் இருபுறமும் இயற்கையழகுடன் கூடிய சோலைகளும் பூத்துக் குலுங்கும் மலர்களும் கண்ணைக் கவர்கின்றன.

இந்நிலையில் வண்டுகள் பூக்களில் உள்ள தேனைப் பருகு வதைக்கண்டு தன் தேரின் மணியோசை மிகுதியால் வண்டு கள் தேனுண்ணுமல் அஞ்சியகலும் என்ற நினைவால் தன் தேரை நிறுத்தி கீழிறங்கி தேரில் உள்ள மணிகளின் நாவை அசையாமல் சிறு சிறு கயிறு கொண்டு கட்டி வண்டுகளுக் கிடர் விளையாது தேர் ஏறி தன் காதலியை அடைந்தான் எனில் அப்பெருமகனின் கருணையை என்னென்பது,

பூத்த பொங்கர் துணையோடு வதிந்த
தாதுண் பறவை பேதுறல் அஞ்சி
மணிநா வார்த்த மாண்வினைத் தேரன்,
உவக்காண் தோன்றும்,

என்பது அகநானூறு. எனவே கருணை என்ற தன்மை அறிவின் பயனுல் வருவது. பிறஉயிர்கள் படும் துன்பத்தைக் கண்டு கருணை புரிவதே அறிவின்பயன். அதனுலே வள்ளு வப்பெருமான்

அறிவினுல் ஆகுவதுண்டோ பிறிதின்நோய்
தன்நோய் போல் போற்ருக்கடை. குறள்.

மேலும் இறைவன் தன்னை வணங்கித் தன் திருவருள் கருணை யைப்பெற வேண்டுமென்கிற ஆர்வலர்களுக்கு எது கேட் பினும் தரவல்லவன் ஆகையினுலே மணிவாசகப்பெருந்தகை கூட

இறைஞ்சி இரந்தவெல்லாம் எமக்கே பெறலாம்

என்கிருர்.

வேண்டிய போதடியார் வேண்டிய போகமது
வேண்ட வெருதுதவு பெருமானே திருப்புகழ்.

காரைக்காலம்மைக்கு கனியமுதளித்தது, மணிவாசகருக்கு நரியைப் பரியாக்கியது பிள்ளைப் பெருமானுக்கு ஞானப் பாலூட்டியது சுந்தரர்க்கு கைலைக்காட்டி சாயுச்யமீந்தது, சொல்வல்லரின் சூலைநோய்தீர்த்தது யாவும் இறைவன்கருணை யல்லவா?

ஆகவே கருணை என்பது இருவகைப்படும், ஒன்று அறக் கருணை மற்றொன்று மறக்கருணை. அறக்கருணை பெரும்பாலும் இறையருள் பெற்றோர்க்கே உரியது. மற்றோர்க்கது மறைந்து நிற்கும், தன்மையுடையது. திருவண்ணாமலையில் சம்மந்தாண்டான் சூழ்ச்சிக்கும், அருணகிரிநாதரின் அன்பின் வலிமைக்குமிரங்கி அவர் விரும்பியபடி (அதலசேடனாராட) பலபேரும் ஆட மயிலுடன் நடமாடி வந்து கருணைகூர்முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டு காட்சி தந்தது அறக்கருணையே,

இச்சா சத்தியான வள்ளிக்கு மணம் புரியுமுன் முருகன் காட்டியது மறக்கருணை. மணம் புரிந்த பின் முருகன் காட்டியது அறக்கருணை என்பதைக் கிழ்க்கண்ட பாடல் விளக்கும்.

கருணைநிறை கடவுள்நீ என்றாலும் உன்கருணை ஓஹோ
மறக்கருணையே
கார் நிறைச் சூரர்களைவேல்கொண்டு மாய்த்தனை கமலமலர்
மேலயனையே
பொருணிறை காண்கிலே என்றே புடைத்துப் புலம்பிடச்
சிறையிலிட்டாய்
புனக்கரும்பாகுமெம் வள்ளியை மணந்தப்பின் பூண்டனை
அறக்கருணையை
இருணிறையும் உள்ளம்உள ரேர்பொய்யாமொழிக்
கின்பந்தனை யூட்டினை
எழிலி வடிவினன் ஏகினன் இந்திரன் சேடன்முதல் யாவர்க்கும்
நற்றணி கையில்
அருணிறைவு காட்டினை அருணகிரிநாதரை ஆட்கொண்டு
பாவகுக்கும்,
அந்த அருள்தந்தனை செந்தமிழ் தெய்வமே
ஆயிகுறமான் மகிணனே,

-எனவே இவ்வறக் கருணையைப் பரிபூரணமாய்ப் பெற்ற தொண்டர்களின் பெருமை இறைவன் கருணையை விட மேலானதென்பர். சூரியனின் பார்வையில் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் இருக்கலாம், ஆனால் சூரியன் ஒளி பெற்ற நொய் மணலில் ஒரு சிறிது நேரம்கூட இருக்க முடியாதல்லவா?

தொண்டர் தம் பெருமை சொல்லவும் எளிதே. ஔவை யார், பட்டினத்தார் இறைவனைத் தொழுது அவன் கருணை யைப் பெற்றார். பத்திரகிரியார் பட்டினத்தார்க்கு தொண்டு செய்து பரகதியடைந்தார். ஆகவே உய்யப் பிறந்த நாம். இறைவன் கருணையை இனிதே பெறபிற உயிரின் இன்னலை நீக்கி இறைப்பணியும் அறப்பணியும் புரிந்து மன ஒருமைப் பாட்டுடன் இறைவனை நினைக்கும் அடியார்களின் உறவு வேண்டி, வஞ்சகம் பேசும் தீயோருடைய உறவு நீங்க மதி வேண்டும், உனை மறவாதிருக்க வேண்டும், நின் கருணை நிதி வேண்டும். நோயற்ற வாழ்வில் வாழவேண்டுமெனஇறைஞ்சி, கருணை நிறைந்து அகம்புறமும் துளும்பி வழிந்து உயிர்க்கெல் லாம் கனைகணுகிதெருள் நிறைந்த இன்பநிலையை வளர்க்கும் பரம கருணாநிதியை மன மெய் வாக்கால் உன்னி அமைதி பெறுவோமாக.

---

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# திருவாசக அநுபூதி உரை*

(சீகாழித் தாண்டவராயர் அவர்கள் இயற்றியது)

திருச்சிற்றம்பலம்

## குலாப் பத்து

இனி, திருக்குலாப் பத்தாவன.

அகத்தியச் சூத்திரம்.

பாரம்பரை மயமாந் திருக்குலாப் பத்து
அநுபவ மிடையிடு படாமை.

பொழிப்புரை :— முற்பதிகத் திருவருளன்பை யுகந்தே, யான் ஆனந்தம் பெறல் இன்றோ? அன்றோ? நடனங் கண்டு நல்விழி பெற்றமை யின்றோ? என்று முண்டு; என்றுருகி யருளுவதான, சிவாநுபூதி, கலிவிருத்தமாகத் திருத்தில்லையி லோதியது.

557. இனி, தேடும்பொருளும் நம் பெருந்துணையுந் திருவடியே யென்ற (தி. - ன.) :—

ஓடுங் கவந்தியுமே உறவென்றிட் டுள்கசிந்து
தேடும் பொருளும் சிவன்கழலே யெனத்தெளிந்து
கூடு முயிருங் குமண்டையிடைக் குனித்தடியேன்
ஆடுங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே.

(இ - ள்.) ஆண்டவனே! தேவரீர் திருத்தில்லை நேர் போய் மன்னும் அம்பரத்தில் ஆடுவதான குஞ்சிதபாதசேவை தரிசனமான இப்போதே பற்றுக் கோடின்றி யாவர்க்கும் விலக்கான ஓடும் பொருதலுக்கிசையாத கவுபீனக்கந்தையுமே யுறவற்றவுறவு கொண்டு எனதுள்ளங் கசிந்துருகுதலானேன்; நிகழும் பயனும் நிறை தவமுந்தேடும் பொருளும் பெருந் துணையுந் தில்லைத் திருச்சிற்றம்பலத்துளாடுங் கழலே யெனத் தெளிந்தேன்; ஊனுயிர் வேறு செய்தான் நொடித்தான் மலை யுத்தமன், எனக் கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடிக் குஞ் சிதபாதக் கீழானேன்; என அருளியதைக் காண்க.

---

* இவ்வரிய நூலைப் பதிப்பித்த சென்னை—திருவான்மியூர், மகா மகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் நூல் நிலை யத்தாரின் அனுமதிபெற்று இது வெளியிடப் பெறுகின்றது. இதன் விலை ரூ. 13/- ஷை நூல் நிலையத்தில் கிடைக்கும், 20% கழிவு உண்டு.

# வேண்டாமடா (காலா)!

**திரு. சி. குமாரஸ்வாமி அவர்கள்,**
**28, கவரைத் தெரு,**
**நத்தம் (Post) செங்கல்பட்டு.**

---

அருணகிரி நாதர் கூறுகிறுர்:— "நித்தமும் ஓதுவார்கள் சித்தமெ வீடதாக நிர்த்தமதாடும் ஆறுமுகனுகிய கோழிக் கொடியன் அடிபணியாமல் குவலயத்தே வாழக்கருதும் மதி யிலிகாள், இது பெறுதற்கரிய பிறவி. ஆயினும் நீர்க்குமிழிக்கு நிகர்என்பர் (நமது) யாக்கை, நில்லாது செல்வம். ஆகவே (முருகனது) சரணகமலாலயத்தை அரைநிமிஷ நேரமாவது தியானம் செய்து, வையிற் கதிர்வடிவேலோனே வாழ்த்தி வறி ஞர்க்கென்றும் நொய்யிற்பிளவளவேனும் பகிர்மின்கள்.

ஏனென்ருல், இதுவெய்யிற் கொதுங்கவுதவா உடம்பு. அந்த உடம்பின் வெறுநிழல்போல் கையிற் பொருளுமுதவாது காணுங்கடைவழிக்கே !

வெட்டுங்கடாமிசை வெங்கூற்றன் ஒருநாள் உங்கள் முன் தோன்றுவான் உம்மைக் கொண்டு போக! அன்றைக்கு அவனை விரட்டியடிக்க, "கார்மாமிசை காலன் வரிற்கலபத் தேர் மாமிசைவந்தெதிரப்படுவாய்" (முருகா !) என (இப் போதிருந்தே) கூப்பிடுங்கள். அழித்துப் பிறக்க வொட்டா அயில்வேலன் கவியை எழுத்துப் பிழையறக் கற்றுத் தினமும் வேண்டுங்கள். அப்படிச் செய்தீர்களானுல், மரணப்ரமாதம் (நமக்கு) இல்லை.

"தண்டாயுதமும் திரிசூலமும் விழத்தாக்கியுன்னைத்
திண்டாட வெட்டி விழவிடுவேன் ... ... ... ... ....
அந்தகாவந்து பார்சற்றென் கைக்கெட்டவே".
"பட்டிக்கடாவில் வருமந்தகாவுனைப் பாரறிய
வெட்டிப் புறங்கண்டலாது விடேன்",
என்று தைரியமாக யமனை விரட்டியடிக்கலாம்!"

அருணகிரிநாதரின் மேற்கண்ட அறிவுரைகளின்படி ஆறுமுகப்பெருமானை வழிபட்டுவந்த ஒருபெரியவரிடம் ஒரு நாள் ஒருவன் வந்தான். வந்தவன் யமன் (காலன்) தான் என்று அம்முதியவருக்குத் தெரியும். இருப்பினும், அவர் அவனிடம் பின்வருமாறு உரையாடினர்;—

பெரியவர்;- நீ யாரப்பா? என்ன வேண்டும்?

வந்தவன்:- நான்யாரா? யமதர்மராஜன் நான்தான்.

பெரியவர்;- ஒகோ! அப்படியா! எதற்கு என்னிடம் வந்தாய்?

வந்தவன் (இயமன்):- உமது உயிரைக் கொண்டுபோக வந்துள்ளேன்.

பெரியவர்;- உனக்கு "வேண்டாமடா" இந்தவேலை. என்னைக் கொண்டுபோக உ..ன்னுல் முடியாது- வீண் முயற்சி!

யமன்:- அதிகம் பேசாதீர். நேரமாகிறது. சீக்கிரம் வாரும். (என்று பெரியவரைப்பிடித்து இழுக்கமுயன்ருன்).

பெரியவர்;- என்னைத் தொடாதே! அப்பாலே போடா! வேலாயுதக்கடவுள் என்னைத் தடுத்தாட் கொண்டுவிட்டது உனக்குத் தெரியாதோ? ஐயோ பாவம்! எந்தை (கந்தவேள்) ஆறுமுக சுவாமி (உன்னைப்) பார்த்தால் நிச்சயமாக இந்த க்ஷணமே உன்னைக்கொன்று விடுவார்! வீணுக அழிந்துவிடாதே. உன் கைவரிசை என்னிடம் பலிக்காது!

வேலாயுதப் பெருமான் பெயரைக் கேட்ட யமன் தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள, விட்டால் போதுமென்று, ஓடிவிட்டான். சும்மா அல்ல! "ஐயா பெரியவரே, உமக்குக் கோடி வணக்கம்! ஆளைவிடும்", எனக் கூறிவிட்டு ஓட்டம் பிடித்தான்.

யமன் போனபின், ஆறுமுகப்பெருமான் செங்கேழடுத்த சினவடிவேலும் திருமுகமும் பங்கே நிரைத்த நற்பன்னிரு

தோளும் கொண்டு, கோலக் குறத்தியுடனும், தெய்வயானை யுடனும் நீலச்சிகண்டியில் ஏறிக் காட்சி தந்தான். பெரியவர் கண்குளிரக் கண்டு ஆனந்தக்கண்ணீர் விட்டுத் தொழுதார். அவர் யமனேடு (காலனேடு) வாதாடியது ஒரு பாட்டாக உள்ளது. அது இது:—

'' வேண்டாமடா காலா வேலாயுதப் பெருமான்
ஆண்டுகொண்ட தென்னையறியாயோ — தீண்டாதே
அப்புறத்தேபோடா அறுமுகவன் கண்டக்கால்
தப்பாமற் கொல்வான் க்ஷணம், ''

*[இப்பாட்டு ஸ்ரீ. திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகளின் ''கந்தர் அலங்காரவிரிவுரை'' பக்கங்கள் 72, 207ல் ''தண்டாயுதமும்'' & ''பட்டிக்கடா'' என்ற கந்தர் அலங்காரப் பாடல்கள் 25 & 64க்கு விரிவுரையில் உள்ளது. திருப்புகழ் அமிர்தம், சென்னை வெளியீடு]*

மனிதராகப் பிறந்தவர்கள் என்ருவது ஒருநாள் இறப்பது நிச்சயம். ''நெருநல் உளன் ஒருவன் இன்று இல்லை என்னும் பெருமை உடைத்து இவ்வுலகு''- குறள் (336). இதை அறிந்தும் நாம், உலகவாழ்வில் வெகுகவலையாயுழன்று திரி வதிலேயே காலத்தை வீணே கழிக்கிறோம். இதைக்கண்டு தான் ''சரணகமலாலயத்தை அரைநிமிஷ நேரமட்டில் தவ முறைதியானம்வைக்க அறியாத சகடசடமூட மட்டி'', என்று மிகவும் மனம் வருந்திப்பாடினர்.

ஆகவே, நாமும் காலனிடம் தைரியமாக ''வேண்டாமடா காலா ... ... ... தீண்டாதே, அறுமுகவன் கண்டக்கால் (உன்னைத்) தப்பாமல் கொல்வான் க்ஷணம்'', என்று யம னிடம் கூறவும், மரணப்பிடியிலிருந்து விடுபடவும், இப் போதே நாம் ''முருகா! இருவினைமுமலமுமற இறவியொடு பிறவியற ஏகபோகமாய் நீயு நானுமாய் இறுகும்வகைபரம சுகமதனையருள்'', ''உனையெனதுளறியு மன்பைத் தருவாயே'' ''காலனெனை யணுகாமலுன திருகாலில் வழிபட அருள்! முருகா! முருகா! ''. என்று எப்போதும் முப்போதும் முரு கனை உளங்கனிந்து துதித்து வணங்குவோமாக.

''உறுதிதரும் இபமுகவன் உறுதுணைவன் நுதல்விழியார்
பெறுபுதல்வன் உயர்மாவைப் பிளந்த வடிவேலுடையோன்
குறுமுனிவன் அகமகிழக் கோதறு செந்தமிழுரைத்தோன்
அறுமுகவன் இருசரணம் அனுதினமும் மனதில்வைப்பாம்''.

*(திருநெல்வேலிப்புராணம்)*

முருகாசரணம்

# " நம்பி யாரூரன் நாம்தொழும் தன்மையான் "

திரு. ந.ரா. முருகவேள் அவர்கள், M. A. M. O. L.
ஆசிரியர், 'திருக்கோயில்'.

**முன்னுரை :**

" நம்பி யாரூரன்நாம் தொழும் தன்மையான் " என்னும் அழகிய இனிய சொற்றொடர், சைவ சமய ஆசிரியர்களாகிய நால்வர் பெருமக்களுள்ளே, சுந்தரமூர்த்தி சுவாமிகளின் அருமை பெருமைகளை, நம்மனோர்க்குப்பல வகையிலும் நினைவூட்டி அறிவுறுத்தி நிற்கின்றது. இவ்வழகிய இனிய அரிய தொடர்,

> " சம்பு வின்அடித் தாமரைப் போதலால்
> எம்பி ரான்இறைஞ் சாய்இஃ தென் " எனத்
> " தம்பி ரானைத்தன் உள்ளம் தழீஇயவன்
> நம்பி யாரூரன் நாம்தொழும் தன்மையான் ! "

என வரும் பெரிய புரணப் பாடலின்கண், உபமன்னிய முனிவர் கூற்றாகவந்துள்ளது. சுந்தரமூர்த்தி சுவாமிகளின் சிறந்துயர்ந்த தன்மைகளைப்பற்றி, நீள நினைந்துணர்ந்து நெஞ்சுருக நேரும் போதெல்லாம், இவ்வருமைத் தொடரினைப் பல காலும் நாம் நினைவு கூர்ந்து மகிழ்கின்றோம், சுந்தரமூர்த்திகளின் சிறப்புக்களை யெல்லாம் உள்ளடக்கிச் சுருக்கமாகக் குறிப்பிடுதற்கு, இதனினும் சிறந்த பொருள் பொதிந்த வேறொரு தொடரினை, நாம் காண்டல் இயலாது.

**நம்பியாரூரன் :**

சுந்தரர்க்குப் பல்வேறு பெயர்கள் உண்டு. பிற சமயாசிரியர்கள் எவரும் கூறிக்கொள்ளா வகையில் " திருமருவும் திரள்தோளான் " " மலை மலிந்த தோள் ஊரன் " " உரையினர் மதயானை நாவலாரூரன் " " மல்லியின் மல்கு திரள் தோளூரன் " " மல்லின் மல்குதிரள் தோளூரன் " " அல்லியந் தாமரைத்தார் ஆரூரன் " என, இவர் தம்மைத் தாமே புகழ்ந்து குறிப்பிட்டுக் கொள்ளும் அளவுக்குப் பேரழகு வடிவம் உடையவராக விளங்கி யிருந்தமையின், மக்கள் இவரைச் சுந்தரர் என்றும், சுந்தரமூர்த்தி என்றும் வழங்கின

ராதல் வேண்டும். ''வடிவு நம்பியாரூரன் செம்பொன் மேனி வனப்பாக...'' என வரும் சேக்கிழார் பெருமான் கூற்றும், ஈண்டு நாம் நினைவு கூர்தற்குரியது ''மற்று நீ வன்மை பேசி வன்தொண்டர் என்னும் நாமம் பெற்றனை'' எனவும், ''தோழமையாக உனக்கு நம்மைத் தந்தனம்'' எனவும் சிவ பெருமான் அருளிச் செய்தமையால், வன்தொண்டர், தம்பி ரான் தோழர் முதலிய பெயர்கள் இவருக்கு ஏற்பட்டன.

நம்பியாரூரர் என்பது பெற்றோர்கள் இவருக்கு இளமை யில் இட்டு வழங்கிய பெயர். ''நம்பியாரூரன் என்ற நாம மும் சாற்றி...'' என்பது இதனை வலியுறுத்தும். இனி 'நம்பி' என்பது ஆண்பாற் சிறப்புப் பெயர் என்றும், 'ஆரூரன்' என்பதே பெற்றோர்கள் இட்ட பெயர் என்றும்; பண்டைக் காலத்தில் பாட்டனின் பெயரைப் பேரனுக்கு வைத்து வழங்குதல் மரபு என்றும்; ''அருமறை நாவல் ஆதி சைவன் ஆரூரன் செய்கை'' எனப் போதரும் பெரிய புரா ணப் பாடலால், சுந்தரரின் பாட்டனார் பெயர் 'ஆரூரன்' என்று தெரிதலால், அப்பெயரே இவர்க்குப் பெற்றோர்களால் இட்டு வழங்கப் பெற்றதாகல் வேண்டும் எனறும்; நாம் கொள்ளுதல் கூடும்! நம்பியாரூரர் என்னும் இப்பெயரையே மந்திரமாகக் கொண்டு வழிபட்டுப் பெருமிழலைக் குறும்பர் எனும் பரமயோகியார் வீடுபேறு அடைந்தனர்.

''நாளும் நம்பி யாரூரர்
நாமம் நவின்ற நலத்தாலே
ஆளும் படியால் அணிமாதி
சித்தி யான அணைந்ததற்பின்''

எனவரும் பெரிய புராணப் பாடலால், நம்பி யாரூரன் என் னும் பெயரையே மந்திரமாகக் கொண்டு ஓதிவந்தால், அணி மாதி சித்திகள் அனைத்தும் பெறலாம் எனவும், நாம் உணர் கின்றோம். உபமன்னிய முனிவர், பெருமிழலைக் குறும்பர் போன்ற தவப் பெருஞ் சான்றோர்கள், 'நம்பியாரூரர்' என் னும் பெயரைப் பாராட்டிப் போற்றியமை பற்றியே, ஆசிரி யர் சேக்கிழார் பெருமான் ''தம்பிரான் அருளினாலே தவத்தி னால் மிக்கோர் போற்றும் நம்பியாரூரர் என்ற நாமம்'' என

விதந்தெடுத்துப் போற்றியருளினர் போலும்! எனவே, நம்பி யாரூரன் என்னும் பெயர் எத்துணைச் சிறப்புடையது என் பதனை யாவரும் இனிது உணரலாம்.

**நாம் தொழும் தன்மையால் :**

இனி நம்பியாரூரர் நாம் தொழத் தகுந்தவர் என்பதும், அதற்குக் காரணம் " குண நலம் சான்றோர் நலனே" என்ற படி, அவர்பால் அமைந்து விளங்கிய சிறந்த பல உயர்ந்த தன்மைகளேயாம் என்பதும், மேலைத் தொடரால் நாம் அறி யக் கிடத்தலின், நாம் தொழத் தகுந்தவராகும்படி, நம்பியா ரூரர்பாற் சிறந்து விளங்கியிருந்த தன்மைகள் சிலவற்றை யேனும் ஆராய்ந்துணர்ந்துய்தல், நம்மனோர்க்கு இன்றியமை யாத கடமையாகும்.

**நுணங்கிய கேள்வி மேலோன் :**

நம்பியாரூரர் வையத்து வாழ்வாங்கு வாழ்ந்தவர். "நிரம் பிய வாழ்க்கை" நடத்தியவர். திருமுனைப்பாடி நாட்டில், திருநாவலூரில், மாதொரு பாகனர்க்கு வழிவழி அடிமை செய்யும் வேதியர் குலத்துள், மேம்படு சடையனர்க்கு, ஏத மில்கற்பின் வாழ்க்கை மனை இசைஞானியார்பால், தீதகன்று உலகம் உய்ய, அவர் திருவவதாரம் செய்தருளினர். தெருவில் தேருருட்டும் சிறு பருவத்தில், நரசிங்க முனையரையர் என் னும் நாடுவாழ் அரசர் கண்டு, இவரை அன்பினல் மகன்மை கொண்டார். அரசர் காதற் பிள்ளையாய் வளர்ந்து வந்த இவர், இளமையிலேயே அளவில் தொல் கலைகள் ஆய்ந்து தேர்ந்தார். 'நுணங்கிய கேள்வி மேலோன்' என விளங்கி ஞர். "முடியால் உலகாண்ட மூவேந்தர்களும்" மதித்து வணங்கும் வண்ணம், எல்லாப் பெருஞ்சிறப்பும் உடையவ ராகத் திகழ்ந்தார். இறைகளோடிசைந்த இன்பமும், இன் பத் தோடிசைந்த வாழ்வும், இவர்க்கு அமையப் பெற்றிருந் தன. இங்ஙனம் மகிழ்ச்சியின் மைந்துற்றிருந்த போழ்தும், "வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்" என் னும் பேருண்மையினை, அவர் மறவாது நன்கறிந்திருந்தார். "மத்த யானை ஏறி மன்னர் சூழ வருவீர்காள். செத்த

போதில் ஆரும் இல்லை. சிந்தையுள் வைம்மின்கள்'' என அவர், அனைவர்க்கும் அறிவுறுத்துகின்றார்.

**'விருந்தாய சொன்மாலை':**

'கற்ற கல்வியிலும் இனியவன்' ஆக இறைவனைக் கண்டுணர்ந்து போற்றிய இவர் சங்க கால இலக்கியங்கள் பலவும் கற்றிருந்தாராதல் வேண்டும்! "கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினும் கொடுப்பாரிலை'' எனப் பாடியிருத்தலொன்றே, இவர்தம் சங்க நூற் புலமைக்குச் சான்று பகரும். "குமண மாமலைக் குன்று போல் நின்று தங்கள் கூறை ஒன்றின்றியே'' "சொல்லரும் புகழான் தொண்டைமான்'' என வரும் இவர்தம் பாடற் பகுதிகளால், குமணன், தொண்டைமான், இளந்திரையன் முதலிய சங்ககால அரசர்களையும், இவர் குறிப்பிட்டிருத்தல் புலனாகின்றது. திருநெல்வாயில் அரத்துறைப் பதிகத்தில், திருக்குறள் சிலவற்றை இவர் எடுத்தாண்டிருப்பது, இவர் 'கற்பவை' கற்றிருந்த முறையினை நமக்குத் தெற்றென விளக்குகின்றது.

திருக்கருப் பறியலூர்ப் பதிகத்தில் "விருந்தாய சொன் மாலை கொண்டேத்தி'' என வரும் தொடரை, அரசஞ்சண்முகனார் அவர்கள் தொல்காப்பியத்துட் போதரும் 'விருந்து' என்னும் பகுதிக்கு மேற்கோளாகக் கூறினர் என்பராகலின், ஆளுடைய நம்பிகள் ஆய்ந்து தேர்ந்த நூல்களுள், தொல் காப்பியமும் ஒன்றாதலை உணர்கின்றோம். "இணைகொள் ஏழெழுநூறு இரும்பனுவல் ஈன்றவன் திருநாவினுக்கரையன்'' என எண்ணித் தொகையையும் குறிப்பிட்டுப் பாடியிருத்தலால், கற்பவை கசடறக் கற்றுயர்ந்த இவர்தம் சீர்த்தி தெரிகின்றது. மணிவாசகரின் திருவாசகமும், சுந்தரரின் மனங் கவர்ந்த நூல்களுள் ஒன்றாக இருந்திருத்தல் கூடும் என்று தோன்றுகின்றது. "உழைதரு நோக்கியர் கொங்கைப் பலாப்பழத்து ஈயின் ஒப்பாய் விழைதருவேன்'' என்னும் திருவாசகத்தின் எதிரொலியை, "வாணார் நுதலார் வலைப்பட்டு அடியேன் பலவின் கனி ஈயது போல்வதன்முன் அடியேன் உய்யப்போவதோர் சூழல் சொல்லே'' என்னும் வரிகளில் நாம் கேட்கின்றோம்.

**'மிக்க விழுத்தவ வேந்தர்' :**

இனி ''சடையன்றன் சிறுவன் இசைஞானி காதலன்'' எனப் பலவிடத்தும் இவர் தம்மைச் சுட்டிக் கொள்ளுதலால், தாய் தந்தையர்பால் இவர்க்கிருந்த பேரன்பு புலப்படுகின்றது. ''நாதனுக்கூர், நமக்கூர், நரசிங்கமுனையரையன் ஆதரித்து ஈச னுக்கு ஆட்செய்யும் ஊர், அணி நாவலூர்'' எனவரும் இவர் தம் திருமொழியால், தம்மை எடுத்து வளர்த்துப் போற்றிய நரசிங்க முனையரையர்பால் இவர் கொண்டிருந்த நன்றியுணர் வும்; ஊர்ப்பற்று நாட்டுப்பற்று முதலியனவும் வெளிப்படு கின்றன. இவர் தம் இல்லற வாழ்க்கை காதலின்ப நலம் சிறந்து திகழ்கின்றது. ''பண்மயத்த மொழிப்பரவை, சங் கிலிக்கும் எனக்கும் பற்றாய பெருமானே'' என்பன போன்ற பகுதிகள், இவர்களின் தூய காதலின்ப வாழ்வின் சிறப்பினைத் தெரிவிக்கின்றன. 'பெற்ற சிற்றின்பமே பேரின்பமாய் அங்கே முற்றவரும் பரிசு' அமையுமாறு அருளுணர்வு மீக்கூர, இவர் காதலின்ப நலம் நுகர்ந்தமை கருதுதற்குரியது. **தொல்காப் பியர் விதித்ததவநெறி** வாழ்க்கையினையே, இவர் சிவனுறையும் திருத்துறையூர் சென்றணைந்து, பவநெறிக்கு விலக்காகும் பதிகம்பாடிப் பெற்றனர் போலும்! ''அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும் சிறந்தது பயிற்றல்'' எனத் தொல்காப்பி யரும் திருவள்ளுவரும் வகுத்துரைத்த 'தவநெறி' வாழ்க் கைக்குச் சிறந்த இலக்கியமாக விளங்குபவர், சுந்தரரேயாவர்.

இச்சிறப்புடைமைபற்றியே ''மிக்க விழுத்தவ வேந்தர்'' ''மேரு வரையின் மேம்பட்ட தவத்தான்'' என்றெல்லாம், இவர் புகழ்ந்து போற்றப் பெற்றுள்ளார் எனலாம். இல்லற வாழ்க்கையின் தொல்லைகளுக்கு இடையேயும், சுந்தரர் இறை வனைச் சிறிதும் மறவாமல் இருந்தமையை, ''பத்திமையும் அடிமையையும் கைவிடுவான் பாவியேன்'' என்னும் பதிகம் காட்டுகின்றது. இப்பெருஞ் சிறப்பினை விதந்தெடுத்து வியந்தே,

> ''செல்வால் ஒற்றி யூரன்
> செய்யசங் கிலியால் ஆர்த்து
> மல்லலம் பரவை தன்கண்
> மாழ்குற அமிழ்த்து மேனும்,

அல்லும்நன் பகலும் நீங்கா
தவன்மகி ழடியில் எய்தி
நல்லஇன் படைத்தி ருப்பன்
நம்பியா ரூரன் தானே''

-எனச் சிவப்பிரகாசர் இருபொருள்பட அழகுறப் புகழ்ந்து மகிழ்ந்தார். ''ஏடு தரும் மலர்க்குழலார் முலைத்தலைக்கே, இடைக்கே எறிவிழியின் படுகடைக்கே கிடந்தும் இறை ஞானம் கூடுமவர் கூடரிய வீடும்கூடிக் குஞ்சித்த சேவடியும் கும்பிட்டே இருப்பர்'' என்னும் சிவஞான சித்தியார் திருப் பாடலுக்கு, நம்பியாரூரரே நல்ல எடுத்துக்காட்டு ஆவார்! இறைவனை நினையாது கழிந்த நாட்களை இவர், ''ஒவும் நாள், உணர்வு அழியும் நாள், உயிர் போகும் நாள், உயர்பாடை மேற் காவும் நாள் என்று இவை அலாற் கருதேன்'' என இழித்துப் பழித்துக் கூறியிருப்பது, நம்மனோர் நினைவிற் பதிக் கற் பாலதாகும்.

**'அடியார்க்கு அடியார்' :**

திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் போன்ற நம் சமயச் சான்றோர்கள்பால், நம்பியாரூரர் கொண்டிருந்த நன்மதிப் பிற்கு எல்லையே இல்லை. ''நாவின் மிசை அரையன்னொடு தமிழ் ஞானசம்பந்தன் யாவர் சிவனடியார்களுக்கு அடியான் அடித்தொண்டன்'' ''நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக் கரசரும் பாடிய நற்றமிழ்மாலை சொல்லியவே சொல்லி ஏத்து கப்பான்'' எனவரும் பாடல்கள், இவ்வுண்மையைச் செவ் விதின் உணர்த்தும். ''உடைய அரசு, உலகேத்தும் உழவாரப் படையாளி, விடையவர்க்குக் கைத்தொண்டு விரும்பு பெரும் பதியை, மிதித்து அடையுமதற்கு அஞ்சுவன்'' என்று இவர் திருவதிகையில் சித்தவடமடம் சேர்ந்ததும்; ''பிள்ளையார் திருவவதாரம் செய்த பெரும்புகலியுள்ளும் நான் மிதியேன்'' என இவர் சீர்காழிப்பதியின் ஊரெல்லைப்புறம் வணங்கிப் போந்ததும் பிறவும்; ஆரூரரின் அருமைமிக்க அடக்கவுணர் வினைப் புலப்படுத்துகின்றன. ஞானசம்பந்தர்க்கும் நம்பியாரூ ரர்க்கும் இடையே, பலதிறப் பண்பொப்புமைகளை நாம் காண்கின்றோம். நம்பியாரூரர் தமக்குரிய இனிய தலைவராக

ஞானசம்பந்தப் பெருமானையே கொண்டிருந்தார் என்றுணர்த் தும் சான்றுகள் பலப்பல வுள்ளன.

**நட்புரிமை நலம்:**

சேரமான் பெருமாளும், நம்பியாரூரரும் கொண்டிருந்த நட்பின் சிறப்புப் பெரிதும் பாராட்டற்பாலதொன்றாய்ப் பிறங்குகின்றது. ''இன்ப வெள்ளத்திடை நீந்தி ஏறமாட் டாது அலேவார்போல் என்பும் உருக உயிர் ஒன்றி உடம்பும் ஒன்றும் என இசைந்து,'' தழுவி மகிழ்ந்துநின்ற இவர்களின் ஒப்புயர்வற்ற சிறந்த நட்பின் திறம், நட்பின் இலக்கணத் திற்கே நல்லதோர் எடுத்துக்காட்டாக இலங்குகின்றது. ''பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடையாளன் தகை மைக்கண் தங்கிற்றுலகு'' என்பதற் கேற்பப் பகைமை பாராட்டுபவர்களையும் கூடப் பண்பார்ந்த நண்பர்களாக்கிக் கொள்ளவல்ல பெருந்திறன் படைத்தவர், நம்பியாரூரர் என் பதற்கு **விறன்மிண்டர் – ஏயர்கோன் கலிக்காமர்** வரலாறுகளே சான்றுபகரும். தோழராகப் பழகுவதற்கு இனிய துணைவர் இவர் என்பது, **சோமாசிமாறர் – கோட்புலியார்** முதலானோர் மாட்டு இவர் கொண்டிருந்த தொடர்பால் நன்கு விளங்கும். கோட்புலியாரின் புதல்வியர் இருவரையும் மணந்து கொள்ள உடன்படாது ''தொடிசேர் தளிர்க்கை இவர் எனக்குத் தூய மக்கள்'' எனக்கூறி, அதுமுதல் ''**வனப்பகை-சிங்கடியப்பன்**'' என இவர் தம்மைக் குறித்துக்கொள்வது, இவர் தம் சான் றாண்மை நலம் இனையதென உணர்த்தும். அவிநாசிப் பதியில் முதலையுண்ட மதலையை வருவித்துக்கொடுத்த அருள்நிகழ்ச்சி, ஆரூரரின் அளப்பரிய இரக்கவுணர்வை விளக்கப் போதிய சான்றாகும்.

> '' இலேக்குளநீர் அழைத்து, அதனில்
> இடங்கர்உற அழைத்து, அதன்வாய்த்
> தலேக்குதலே மதலேஉயிர்
> தழைப்ப.அழைத் தருளியநின்
> கலேக்கும்,வட கலேயின்முதற்
> கலேக்கும்உறு கணக்கு,உயர்பொன்
> மலேக்கும்,அணு நிலேக்கும்உரு;
> வன்தொண்டப் பெருந்தகையே!''
>
> —திருவருட்பா

**நகைச்சுவை நயம் :**

நம்பியாரூரரின் பாடல்களில், ஞானசம்பந்தர் பாடல் களின் சாயல் காணப்படுகின்றது. தோழமை இயல்பைக் காட்டும் நகைச்சுவைநலங்கள் பல நிரம்பியுள்ளன. "வாழ்ந்து போதீரே" "எத்துக்கு இங்கிருந்தீர் எம்பிரானிரே?" .......... என்பன போன்றுவரும் பகுதிகள், இறைவன்பால் இவர் கொண்டிருந்த நட்புரிமையின் பெற்றிமையை, நன்கினிது விளக்குகின்றன. "பாதியோர் பெண்ணை வைத்தாய்! படர் சடைக் கங்கை வைத்தாய்! மாதர் நல்லார் வருத்தம் அது நீயும் அறிதியன்றே?" முதலிய பாடல்கள், இவரது சொல் லாற்றலைப் பல்லாற்ருனும் விளக்க வல்லனவாகும். "பத்தூர் புக் கிரந்துண்டு" எனத் தொடங்கும் திருநாகைக்காரோணப் பதிகத்தால் "வாழ்க்கை வாழ்வதற்கே" என்பதுதான் இவர் தம் கோட்பாடு ஆகும் எனத் தோன்றுகிறது. "நீதியில் ஒன்றும் வழுவேன் நிட்கண்டகம் செய்து வாழ்வேன்" என்பன போல, இவர் தம் பண்புகளைத் தாமே குறிப்பிட் டுரைத்திருத்தல், இவரது சிறந்த தன்மைகள் இவையிவை என உணர்ந்து கொள்ள நம்மனோர்க்குப் பெரிதும் துணை புரி கின்றது.

**சைவப்பயிர் வளர்த்த சான்றோர் :**

நம்பியாரூரர், திருநெறி இயக்கத்தின் மாபெருந்தலைவர் களுள் ஒருவர். திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும் தொடங்கி நடத்திப் பரப்பிய திருநெறி இயக்கத்தினை, அவர் களுக்குப் பின்னர்த் தலைவராகப் போந்து, அவர் தம் அடிச் சுவட்டில் நன்கினிது காத்து வளர்த்து, என்றும் நின்று நிலவு மாறு செய்தருளிய பெருந்தகையாளர் நம்பியாரூரரே யாவர்! தொல்காப்பியர், திருவள்ளுவர் போன்ற சான்றோர்கள் அறிவு வெளியில் நின்று தனித்திருந்து ஆராய்ந்து தத்தம் நூல்களை இயற்றித் தமிழ்த் தொண்டாற்றிப் போந்தனர். ஆனால், திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர் முதலிய சமயாசிரியர்கள் தாம், முதன் முதலில் மக்களோடு மக்களாகக் கலந்து பழகி, பல்லாயிரக்கணக்கான மக்களின் ஆதரவும் ஒத்துழைப்பும் பெற்று, நாட்டு மக்களிடையே ஒரு மாபெரும் இயக்கத் தினைத் தோற்றுவித்துச், சங்ககாலத்திற்குப் பின்னர் இடைக்

காலத்தில் தமிழ் நாட்டிற்கு நேர்ந்த, எத்தனையோ பல கேடுகளையெல்லாம் நீக்கிப் போக்கித் தமிழகத்திற் புதியதொரு பெரும் புரட்சியும் மறுமலர்ச்சியும் விளையுமாறு செய்தருளினர். இஞ்ஞான்றை அரசியற் புரட்சிகளைவிட நால்வர் பெருமக்கள் நிகழ்த்திய அருளியற் புரட்சி, எத்தனையோ பல மடங்கு ஏற்றமுடையதாகும்! அத்தகைய திருநெறி அருளியற் புரட்சி இயக்கத்தின் வளர்ப்புத் தந்தையாகவும்,மாபெருந் தலைவராகவும், வரலாற்றாசிரியராகவும் விளங்கிப் பெருந்தகுதி பொருந்திய பெருந்தகையாளர், நமது நம்பியாரூரர் பெருமான்! சுருங்கக் கூறல் வேண்டின், வளமிழந்து வறண்டு கடந்த இடைக்காலத் தமிழ் நிலத்தைப் பண்படுத்திப், புன்னெறிக்களை எடுத்துப், பக்திவிதை விதைத்துத், திருநாவுக்கரசரும் திருஞான சம்பந்தரும் சென்றனராக, அதற்கு அன்புநீர் பாய்ச்சிப் பாதுகாத்துச் சைவப் பயிராகத் தழைத்தோங்கி வளருமாறு செய்தருளியவர், நம்பியாரூரர் பெருமானே யாவர் என, நாம் ஒருவாறு கூறி முடிக்கலாம்.

''படியில் நீடும் பத்திமுதல்
அன்பு நீரிற் பணைத்தோங்கி
வடிவு நம்பி யாரூரர்
செம்பொன் மேனி வனப்பாகக்
கடிய வெய்ய இருவினையின்
களைகட் டெழுந்து கதிர்பரப்பி
முடிவி லாத சிவபோகம்
முதிர்ந்து. முறுகி விளைந்ததால்''

என ஆசிரியர் சேக்கிழார், இவ்வுண்மையினை அழகுற விளக்கியிருத்தல் காணலாம்.

முடிவுரை :

நம்பியாரூரரால் தமிழ் மக்கள் அடைந்துள்ள நன்மைகளுக்கு அளவேயில்லை! அவர் அருளிச் செய்த திருத்தொண்டத் தொகை ஒன்றினால் மட்டுமே, தமிழ் நாடு எண்ணிறந்த பல நன்மைகளை எய்தியுள்ள தெனலாம். சேக்கிழாரடிகள் திருத்தொண்டத் தொகையின் சிறப்பினைப் பலவிடத்தும் பாராட்டியுரைத் திருத்தல், இதனை வற்புறுத்தும். எனவே, திருத்தொண்டத் தொகையினை அருளிச் செய்தவர் என்ப

தொரு காரணமே, "நம்பியாரூரர் நாம் தொழும் தன்மை யார்" என்று நம்மனோர் நன்கினிது துணிந்துணர்ந்து கொண்டு, வணங்கியுய்தற்குச் சாலும்!

"நேசம் நிறைந்த உள்ளத்தால்
நீலம் நிறைந்த மணிகண்டத்(து)
ஈசன் அடியார் பெருமையினை
எல்லா உயிரும் தொழஎடுத்துத்
தேசம் உய்யத் திருத்தொண்டத்
தொகைமுன் பணித்த திருவாளன்
வாச மலர்மென் கழல்வணங்க
வந்த பிறப்பை வணங்குவாம்!'

— சேக்கிழார்.

*[ அகில இலங்கைச் சேக்கிழார் மன்றத்தின். மூன்றாம் ஆண்டு விழாவில், யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரிப் பெரு மண்டபத்தில், திரு. ம. ஸ்ரீகாந்தா, O.B.E., C.C.S. அவர்களின் தலைமையில், 2—6—68 ஞாயிறன்று நிகழ்த்திய சொற்பொழிவினைத் தழுவியது. ]*

*— ஆசிரியர்*



மேற்கண்ட கட்டுரை 'திருக்கோயில்' ஆசிரியர் அனுமதிபெற்று பிரசுரிக்கப்படுகிறது.

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

( மலர் 19. இதழ் 10-ன் தொடர்ச்சி )

## IV

## MANIKKA VASAHAR

(Sanskrit form MANIKYA VACHAKA)

97 என்னையப்பாவஞ்சலென்பவரின்றிநின்றெய்த்த
லைந்தேன்
மின்னையொப்பாய்விட்டிடுதிகண்டாயுவமிக்கின்
மெய்யே
யுன்னையொப்பாய் மன்னுமுத்தரகோசமங்கைக்
கரசே
யன்னையொப்பாயெனக்கத்தனொப்பாயென்னரும்
பொருளே.

97 With none to cheer me from my fear, far have I wandered wearily,
O Lightning-like, and wilt Thou leave me ? If I truly thee compare,
Uttarakosamangai's king, I find naught else resembling Thee;
But a true father, mother dear art Thou to me, my treasure rare.

(To be continued.)

---

# மணிவாசகரின் மாண்புறு உவமைகள்

வித்துவான். திரு. பி. ரா. நடராசன் அவர்கள்.

(முன் இதழ் 10-ன் தொடர்ச்சி)

**உவமை 23.**

'பார்ப்பு என'   (44)

**உ. பொ. நி.**

. . . . . . பார்ப்பெனப்
பாணனேன் . . . . . .

**பொழிப்புரை.**

இவ்வுலகத்தே கூட்டை விட்டு வெளிப்பட்டுச் செல்ல அறியாத ஒரு பறவைக் குஞ்சுபோல வீணனாகிய யான்.

'பார்ப்பு என' என்பதற்குக் குரங்குக் குட்டியெனப் பொருள் கொண்டு குரங்கின் குட்டியானது எக்காலத்தும் தன் தாய்க் குரங்கினைப் பற்றிச் செல்வதுபோல உன்னையான் பற்ற அறியேன் எனக் கூறலும் ஒன்று.

**விளக்கம்.**

கூட்டை விட்டுச் செல்ல முடியாத சிறிய குஞ்சிற்கு இறக்கைகள் கிடையா. அதன் தாய்ப் பறவை தான் உண்டு வந்ததையே தன் குஞ்சிற்கு ஊட்டி வளர்க்கும் பெற்றியது, குஞ்சாகிய பெருமானுக்குத் தாயாகிய இறைவன் ஊட்டவில்லை. அதனால் பறக்கும் நிலையை எய்யமுடியவில்லை எனப் பணிவுடன் பகரும் நிலையை என்னென்பது.

**உவமை 24.**

'எள்ளும் எண்ணெயும் போல்'   (46)

**உ. பொ. நி.**

நள்ளும் கீழுளும் மேலுளும் யாவுளும்
எள்ளும் எண்ணெயும் போல்நின்ற எந்தையே.

**பொழிப்பு.**

எல்லாப் பொருள்களின் நடுவிலும், கீழும், மேலும், எள்ளின்கண் முழுவதினும் ஒரே நிலையில் விளங்கும் எண்ணெய்போல பரந்து நிற்கும் என் அப்பனாகிய சிவன்,

விளக்கம்.

இறைவன் இல்லா இடமேது? அவன் நிறைந்திருக்கும் இடமுழுவதினும் ஒரே பெற்றித்தாய் விளங்கும் பேராற்றல் கொண்டவன் என்பது தோன்ற 'எள்ளும் எண்ணெயும் போல்' என்று கூறினர். எள் சிறிய பொருள். அச்சிறு பொருளினுள் இவ்விடத்து என்று சுட்டிக்காட்ட முடியாத படி நிறைந்திருக்கும் எண்ணெய்போல் இறைவன் இலங்கு கின்முன் என்று கூறும் அழகு நம்மனேருக்குக் கழிபேருவகை தருவதாகும். இதே உவமையை அகத்தியனர்தம் இலக்கண நூலில் எள்ளினின்று எண்ணெய் எடுப்பதுபோல, இலக்கி யத்தினின்று எடுபடும் இலக்கணம்' என்முர். 'எள்ளும் எண் ணெயும் போல்' என்பதற்கும் 'எள்ளினின்று எண்ணெய் எடுப்பது போல' என்பதற்கும் சற்று வேறுபாடுண்டு. அகத் தியனர்கூற்றுப்படி இலக்கியத்திலிருந்து இலக்கணம் தோன்று கின்றது. ஆம். இலக்கியங்கண்டதற்கு இலக்கணம் இயம் புவதினியே நன்னூலும் நவிலும். எனவே வாழ்வாகிய பெருநிலை இருந்தால்தானே அதனைச் சென்றடைதற்கு நெறி தேவைப்படும். (வாழ்வாகிய பெருநிலை - இலக்கியம்; சென் றடையும் நெறி - இலக்கணம்) வாழ்வாகிய பரம்பொருள் யாண்டும் இருக்க நெறியாகிய பக்தி நமக்குத் தேவை என்ப தனையுங் கொள்ளலாம்.

---

(தொடரும்)

# கண்ணுக்கினியனைக் கருதிப்பாடுவோம்.

**திரு. ஸ்ரீராமநாமப்பரதேசி அவர்கள்,**
**3119, கீழ இரண்டாம் வீதி,**
**புதுக்கோட்டை-1.**

---

"முத்தன்ன வெண்ணகையாய்" என முன்னால் ஒரு பெண்ணை எழுப்பியவர்கள் "ஒண்ணித்தில நகையாய்" என மற்றொருத்தியை எழுப்புகின்றனர். பல் விளக்கியதால் முத்துப் போலிருந்தன அவளது பற்கள்! தூக்கத்தில் சிரிக்கும் இவளுடைய பற்கள் இயற்கையாகவே ஒளிவீசுகின்றன என்பது குறிப்பு. அரைத் தூக்கத்திலிருக்கும் அப்பெண் புன் சிரிப்புடன் தூங்குகின்றாள் போலும்! அவளை, "அடி, அம்மா! உனக்கு இன்னும் பொழுது விடியவில்லையா? எழுந்திரு" என்கின்றார்கள்.

தன்னைத் தூக்கத்தில் எழுப்புபவளது குரல் அவளுக்கு அந்த நிலையில் இனிமையில்லாது துன்பமாயிருக்கின்றது. அதனால் "கிளிபோன்ற மொழியுடைய எல்லாரும் வந்துவிட்டார்களா?" எனக் கேட்கின்றாள். தன்னை எழுப்பும் பெண்ணின் குரலை, அந்த சுந்தராங்கி ரசிக்கவில்லை. அதனால் கிளி போன்ற மொழி உடையவர்களைப்பற்றி விசாரிக்கிறாள்.

**வந்தவர்கள்:** நாங்கள் எல்லோரையும் எண்ணிப் பார்த்து எத்தனை பேர்கள் வந்திருக்கின்றார்கள் என்று சொல்லுகிறோம்! நீ அதுவரை தூங்கி தவப்பொழுதை அவப்பொழுதாக்காதே!

முற்றாத பால் மதியம் சூடினானை;
மூவுலகும் தானாய முதல் வன்தன்னைச்
செற்றார்கள் புரமூன்றும் செற்றான் தன்னைத்
திகழொளியை; மரகதத்தை: தேனைப் பாலைக்
குற்றாலத்தமர்ந்துறையும் குழகன்தன்னைக்
கூத்தாட வல்லானை: கோனை: ஞானம்
பெற்றானை: பெரும்பற்ற புலியூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே — *அப்பார்.*

என்று பெரியோர்கள் கூறியுள்ளார்கள். எனவே காலத்தை விணுக்காது உடனே எழுந்துவா. தேவர்களுக்கெல்லாம் அப்பெருமான் மருந்து. அன்று ஆலகால விஷத்தை, தேவர்களைக் காப்பதற்காக, தானே உண்ட கருணையாளனன்றோ!

கோலாலமாகிக் குரைகடல் வாய் அன்றெழுந்து
ஆலால முண்டான் அவன் சதுர்தான் என்னேடீ
ஆலாலமுண்டிலனேல் அன்று அயன் மாலுள்ளிட்ட
மேலாய தேவரெல்லாம் வீடுவர் காண் சாழலோ

— திருவாசகம்.

என்றபடி அப்பெருமான் தேவர்கட்கெல்லாம் "விண்ணுக்கோரு மருந்தானவன்". வேதத்தின் உருவாய், அதன் பொருளாய், அருள் உருவாய் விளங்கும் பெருமானன்றோ சிவ பெருமான்!

வேதங்களாய் ஒற்றிமேவும் சிவத்தின் விளைவருளாய்
பூதங்களாய்ப் பொறியாய்ப் புலனுகிப் புகல்கரண
பேதங்களாய் உயிராகிய நின்னை இப்பேதையேன்வாய்
வாதங்களாலறிவனே வடிவுடை மாணிக்கமே —அருட்பா.

என்றபடி "வேத விழுப்பொருளான்" இறைவன், நாம் செய்த புண்ணியத்தால்

கருப்பூர சுந்தரன்: பூங்கடம்பவன சுந்தரன்: உட்கரவாத் தொண்டர்
விருப்பூருங் கலியாணசுந்தரன்: நல்லறவடிவாய் விளங்கும் ஏற்றுப்
பொருப்பூருமபிராம சுந்தரன் தேன் புடைகவிழப் பொன்னிற் பூத்த
மருப்பூசு சண்பக சுந்தரன் மகுடசுந்தரன்ருன் வாழி மன்னே!

என்று "கண்ணுக்கினியவனுக" வந்துள்ளான். அப்பேர்ப்பட்ட பெருமானை "காதலாகிக் கசிந்துகண்ணீர் மல்கி" பாடி உருகவேண்டாமா? பாடாமல், உருகாமல், காலத்தைக் கழிக்கலாமா?

பாடிற்றிலேன்! பணியேன்! மணி நீ ஒளித்தாய்க்குப் பச்சூன்
வீடிற்றிலேனை விடுதிகண்டாய்! வியந்து ஆங்கு அலறித்
தேடிற்றிலேன்! சிவன் எவ்விடத்தான்! எவர் கண்டனர் என்று
ஓடிற்றிலேன்! கிடந்து உள் உருகேன்! நின்று உழைத்தனனே-

என இறைவனைப்பாடி உருகாது காலத்தை வீணே போக்கக் கூடாது. நீயே எழுந்துவந்து எத்தனை பேர் வந்துள்ளனர்

என எண்ணிப்பார். நாங்கள் அப்படிக் காலத்தை வீணுக்க மாட்டோம்'' என எழுப்புகின்றுர்கள்.

இறைவனை வணங்குவதற்கு சுறு சுறுப்பில்லாது சோம் பேறியாக உழலக்கூடாது. நேரமிருக்கும்போதெல்லாம் இறைவனை வணங்க வேண்டும். காலத்தை வீணுக்கக் கூடாது என்பது இப்பாட்டின் கருத்து.

நம்வாழ்வு சிறிது. ஆசை, துன்பம், நோய், வறுமை, முதலானவை நிறைந்தது இவ்வாழ்வு. இதில் உழன்று காலத்தை வீணுக்கக்கூடாது. இறைவனைச் சிந்திக்க வேண்டும்.

ஆயுளுள் சில; வெங்காமம்: அனந்தல்: நோய்; சோம்பு கொண்ட
காயமே வளர்க்க வென்னில் கருமங்கள் செயலிவ்வாறே.
தேயுநாள் கழிய நிற்கும் சேடநாள் அற்பமாகும்.
தூயநாதனைத் தொழாமல் தொலைக்கின்றுய் அழியுநெஞ்சே.

காலத்தை வீணுக்காது இறைவனை வணங்க அவனருள் வேண்டுவோமாக!

ஒண்ணித்தில நகையாய்! இன்னம் புலர்ந்தின்றே!
வண்ணக்கிளி மொழியார் எல்லாரும் வந்தாரோ?
எண்ணிக்கொடுள்ளவா சொல்லுகோம் அவ்வளவும்
கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே!
விண்ணுக்கொருமருந்தை வேத விழுப்பொருளைக்
கண்ணுக்கினியானைப் பாடிக் கசிந்துள்ளம்
உள்நெக்கு நின்றுருக யாமாட்டோம் நீயே வந்து
எண்ணிக்குறையில் துயிலேலோரெம்பாவாய்! — திருவெம். 4

— திருச்சிற்றம்பலம் —

# காலக் கணிதம்

திரு. A. இராசமாணிக்கம் அவர்கள்,
உதவி ஆசிரியர்,
ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்தொடக்கப்பள்ளி,
திருப்பனந்தாள்.

---

*(மலர் 19 இதழ் 10 பக்கம் 504ன் தொடர்ச்சி)*

**இதழ் 6.**

முன்குறிப்பு:

முன் ஐந்தாம் இதழில் சிருஷ்டியாதி சென்ற வருஷம், நடேசர் அபிஷேகம், கார்த்திகை தீப தரிசனம், மகாசிவ ராத்திரி, மேக விகற்பம், மாரியளவு, மழைவரும் தினத்தைக் காணுதல் முதலியவை கூறப்பெற்றன. இவ்விதழில் வாரத் தின்யோகம், யோகினி, இராசி இருப்புக் கணக்கிடல், சுதேச இராசிமானம் கணக்கிடல், அக்ஷாம்ஸம் கணக்கிடல், பலச் சாயை கணக்கிடல், அகசு முதலியவைகளை உதாரண கணித மூலமாகக் காண்போம்.

**வாரத்தில் வருகிற நக்ஷத்திர யோகம் :—**

பஞ்சாங்கத்தில் முக்கியமாய் ஒவ்வொரு வாரத்திலும் வருகிற நக்ஷத்திரங்களின் யோகங்கள் குறிப்பிடப்பட்டிருப் பதைக் காண்கிறோம். அவை அ. அமிர்தயோகம், சி. சித்தி யோகம், ம. மரணயோகம். இதில் முதல் இரண்டு யோகங் களும் சுபமானவை. மூன்றாவதாகிய மரணயோகம் சுப காரியங்களுக்கு விலக்கானதாகும்.

இந்த யோகங்கள் விளங்கும் பொருட்டுப் பஞ்சாங்கத்தி லேயே ஒரு விளக்கச்சக்கரம் கொடுக்கப்பட்டுள்ளது, மற்றும் அந்தக் கிழமைக்கு நேராக யோகத்தை முதல் எழுத்தால் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஒருதினத்தில் இரண்டுயோகங்கள் குறிப்பிடப்பட்டிருந்தால் முதலில் குறிப்பிட்ட யோகம்

அன்று குறிப்பிட்ட நக்ஷத்திரம் எத்தனை நாழிகை வரை உள்ளதோ அத்தனை நாழிகை வரை அந்த யோகம் உள்ளது என்றும், அதன்மேல் அடுத்த நக்ஷத்திரம் ஆரம்பமானதால் அந்நாளில் அந்நக்ஷத்திரத்தின் யோகம் இரண்டாவதாகக் குறிப்பிட்ட யோகம் என்றும் கொள்ள வேண்டியது.

மற்றும் ஒரு யோகம் உள்ளது. ஞாயிறில் பரணியும், திங்களில் சித்திரையும், செவ்வாயில் உத்திராடமும், புதனில் அவிட்டமும், வியாழனில் கேட்டையும், வெள்ளியில் பூராடமும், சனியில் ரேவதியுமாக வருவது பாலாரிஷ்ட யோகமாகும். இது சுபகன்மங்களுக்கு விலக்கப்படுவதாகும். இதன் தன்மை விளங்கும்படி,

**'ஆயசித்திரையிற்றிங்க ளணிகுசனுத்திராடம்**
**ஞாயிறு பரணி கேட்டை நற்குருவாரமாகும்**
**ஏயறு புதனவிட்ட ரேவதி சனியேயாகும்**
**தூய பூராடம் வெள்ளியதிற் சன்மந்துயரஞ்செய்யும்'**

என்று தமிழ் ஜாதக அலங்காரத்தில் பாலாரிஷ்ட பகுதியில் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். (இது கிழமை பிறந்த தினமாகும்) இவ்வித நாளில் ஜனனமானோர் என்ருவது இவ்வித வாரமும் நக்ஷத்திரமும் சேர்ந்துவரும் தினத்தில் அவ்வாரக் கிரக தேவதைக்குச் சாந்தி செய்வதால் பீடை நீங்கும். கிரக பலம் இருந்தால் இந்நாளில்பிறந்தோர்பாலாரிஷ்டத்தினின்றும் பிழைத்திருப்பார்கள். இதன் மேல் யோகினியைக் கவனிப்போம்.

**யோகினி :—**

யோகினியானவள் வஸ்திரம் தரியாதவளும், நாணம் இல்லாதவளும், பொல்லாத சிந்தையையுடையவளுமாய் இருப்பாள். இவள் பூர்வபட்சம் திதிகள் 15 அமரபட்சம் திதிகள் 15 ஆக 30 திதிகளிலும் முறையே கிழக்கு, வடக்கு, தென்கிழக்கு, தென்மேற்கு, தெற்கு, மேற்கு, வடமேற்கு, வடகிழக்கு, ஆகாசம், பூமி ஆகிய திக்குகளில் திதிக்கு ஒரு திக்காகப் பூர்வபட்சம் பிரதமை முதல் மூன்று முறை இருப்பாள். அதாவது பூர்பட்சம் பிரதமை முதல் தசமி முடிய ஒரு முறையும், பூர்வபட்ச ஏகாதசி முதல் கிருஷ்ணபட்ச பஞ்சமி

வரை ஒரு முறையும், கிருஷ்ணபட்ச ஸஷ்டி முதல் அமாவாசை முடிய ஒரு முறையுமாக மேலே குறிப்பிட்ட திக்குகளில் இருப்பாள். ஆகையால் இவள் இருக்கும் திதிகளின் திக்குகளும், ஆகாசமும், பூமியும், இடது புறமும் யாத்திரை போகுதல் கிரகப் பிரவேசம் முதலிய நற்காரியங்கள் செய்தல் ஆகியவை கூடாவாம்.

இவ்விதம் ஆகாத யோகினியின் திக்கை அந்தந்தத்திதிக்கு நேராகப் பஞ்சாங்கத்தில் குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணலாம். அடுத்து இராசி இருப்பு என்பதைக் கவனிப்போம்.

**இராசி இருப்பு:**

மேடாதி 12 இராசிகளிலும் சூரியன் ஒரு வருஷத்தில் சஞ்சரிக்கிறது. சூரியன் இருக்கும் இராசியின் இராசிமான சங்கையை விநாடியாக்கி அந்த மாத நாட்களுக்கு ஈந்ததை எந்தத் தேதிக்கு இருப்புத் தேவையோ அதற்கு முன்தினம் வரைக் கணக்கிட்டு வந்தது சென்ற விநாடி. இராசிமான சங்கையில் அவ்விநாடியைக் கழித்து வந்த மீதி அன்றைக்கு அந்த இராசியின் இருப்பு ஆகும். இதைத் தேதி வாரியாகக் கணித்துக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அம்மாத தினங்களுக்கு ஈந்ததில் மீதி இருந்தால் ஒரு தினத்தில் ஒன்று சேர்த்து மறுதினம் மீதியைத் தள்ளியும் கணக்கிடப்பட்டிருக்கும்.

உதாரணமாகக் கலியப்தம் 5069 கீலக ௵ சித்திரை மாதம் 10உக்கு இராசி இருப்புக்காண வேண்டின், தஞ்சாவூர் மத்தியானத்துக்குக் கணிக்கப்பட்ட ஒரு பஞ்சாங்கத்தை எடுத்துக்கொள்வோம். தஞ்சாவூர் அக்ஷாம்ஸம் பாகை 10 கலை 47. இதற்கு நிரயண சாவன லக்ன மானப்படி மேஷத்துக்கு 4 நாழிகை 33 விநாடி. இதை விநாடியாக்க 273 விநாடியாகிறது. இதைச் சித்திரை மாதத்திய தேதி 31ஆல் வகுக்க $273 \div 31 = 8\frac{25}{31}$ விநாடியாகிறது. இதை 9 தேதிகளுக்குப் பெருக்க $8\frac{25}{31} \times 9 = 79\frac{8}{31}$ விநாடியாகிறது. இது ஒன்பது தேதிகளுக்குச் சென்ற விநாடியாகும். இதைப் பின்னம் நீக்கி இலக்கினமானத்தில் கழிக்க 4–33—1-19 = 3-14. இது கீலக ௵ சித்திரை மாதம் 10ஆம் தேதிக்குரிய

இராசி இருப்பு நாழிகை விஞடியாகும். இனி, சுதேச இராசி மானத்தைக் காண்போம்.

**சுதேச இராசிமானம் அறிய**

சுதேச இராசிமானம் அறிய வேண்டுமாயின் சுதேச சரகண்டத்தின் முதல் எண்ணை இலங்கோதய மேட மீன விராசிமான விஞடிகளில் கழித்துக் கன்னி, துலா, விராசிமான விஞடிகளில் சேர்த்தல் வேண்டும். சரகண்டத்தின் இரண்டாவது எண்ணை இடபகும்ப விராசிமான விஞடிகளிற் கழித்துச் சிங்க விருச்சிக விராசிமான விஞடிகளிற் சேர்த்தல் வேண்டும். சரகண்டத்தின் மூன்ருவது எண்ணை மிதுன மகர விராசிமான விஞடிகளிற் கழித்துக் கடக, தனுசு விராசி மான விஞடிகளிற் சேர்த்தல் வேண்டும்.

சுதேசத்துக்குச் சரசுண்டம் காணுவது எங்ஙனமெனின் இலங்கா சரகண்டத்தைச் சுதேசத்தின் பலச் சாயையினுல் முதல் இரண்டு மூன்று எண்களைத் தனித்தனியாகப் பெருக்கிப் பின்னங்களை நீக்கி மூன்ருவது தொகையை 3ஆல் வகுத்து வந்த ஈவை வைத்துக்கொண்டு சேடத்தை நீக்க வேண்டும். இலங்கா சரகண்டமாவது முதல் எண் 10 இரண்டாம் எண் 8 மூன்ரும் எண் 10 (10—8—10) ஆகும். இவை தனித்தனி விஞடியாகும். பலச்சாயை என்பது இரவு பகல்களின் பிரமாணம் சமமாய் இருக்கிற தினத்தில் ('மேசாயன' துலாயன, காலங்களில்) நடுப்பகலாகிய 15 நாழிகையில் அந்தந்த அக்ஷாபஸ ஸ்தலங்களில் 12 அங்குலமுள்ள குச்சியின் நிழல் எத்தனை அங்குல வியாங்குலமுள்ளதாயிருக்கிறதென்று கணக்கிடப்பட்டதாகும்.

உதாரணமாகச் சென்னைக்கு இராசிமானம் காண்போம் சென்னை 13 பாகை 4 கலை உத்திர அக்ஷாம்ஸத்தில் உள்ளது' சென்னைக்குப் பலச்சாயை 2 அங்குலம் 47 வியாங்குலம். இதை இலங்கா சரகண்டம் 10—8—10 ஆல் தனித்தனி பெருக்க.

| (1) $2{\cdot}47 \times 10$ | (2) $2{\cdot}47 \times 8$ | (3) $2{\cdot}47 \times 10$ |
|---|---|---|
| $27{\cdot}57$ | $22{\cdot}14$ | $27{\cdot}50$ $\div 3 = 9$ |

முதல் எண்ணில் பின்னம் பாதிக்கு மேலானதால் 28 ஆகும். இரண்டாம் எண்ணில் பின்னம் பாதிக்குக் குறைவுள்ளதால் 22 ஆகும். மூன்றும் எண்ணில் பின்னம் நீக்கி 3 ஆல் வகுக்க 9 ஆகும்.

இப்படியாக 28—22—9 என்பது சென்னைக்குச் சுதேச சரகண்டமாகும். இந்தச் சரகண்டத்தின் விளுடியை இலங்கோதய இராசி மானத்தில் கழித்தும் கூட்டியும் மேடாதி இராசி மானத்தைக் காணவேண்டும்.

**இலங்கோதய இராசிமானம் :**

மீனம்மேடங் கன்னி துலாம் விருப்பு மிருநூற்றெழுபதுடன்
ஆன வெட்டே விடை சிங்கமாகுங் குடந் தெண் முந்நூறில்
ஈன மொன்று நண்டு தனு வெழில் சேர் மிதுனமகர மிவைக்
கான முந்நூற்றிரு பான் மூன்ருகு மிலங்கை விளுடி யென்ப.

*(ஜாதக அலங்காரம்)*

இம்மூலத்தினை நினைவில் கொண்டு இலங்கோதய மேடாதி இராசி மானத்தை அறிய ஏதுவாகும்.

**சென்னைக்குச் சுதேச இராசிமானம் :—**

| இராசி | இலங்கா இராசி மானம் விளுடி | விபரம் | சரகண்டம் 1, 2, 3 | சுதேச இராசி மான விளுடி | சுதேச இராசி மானம் நா. விளுடி |
|---|---|---|---|---|---|
| மேஷம் | 278 | — | 28 | 250 | 4–10 |
| ரிஷபம் | 299 | — | 22 | 277 | 4–37 |
| மிதுனம் | 323 | — | 9 | 314 | 5-14 |
| கடகம் | 323 | + | 9 | 332 | 5-32 |
| சிம்மம் | 299 | + | 22 | 321 | 5-21 |
| கன்னி | 278 | + | 28 | 306 | 5- 6 |
| துலாம் | 278 | + | 28 | 306 | 5– 6 |
| விருச்சிகம் | 299 | + | 22 | 321 | 5-12 |
| தனுசு | 323 | + | 9 | 332 | 5-32 |
| மகரம் | 323 | — | 9 | 314 | 5-14 |
| கும்பம் | 299 | — | 22 | 277 | 5-37 |
| மீனம் | 278 | — | 28 | 250 | 4-10 |

இவை சென்னை பலச்சாயைக்குக் கணிக்கப்பட்டது. லக்னமானங்களுக்கு முன்போல் அந்தந்த வருஷத்திய நிரயன

சாவன இராசிமானத்தை உபயோகிக்க வேண்டும். இதன் மேல் அக்ஷாம்ஸம் காணும் விதம் கூறுவோம்.

**அக்ஷாம்ஸம் காண :—**

சுதேசத்தின் பலபாவைக்கலை செய்து அது எத்தனை கலையோ அத்தனைக்கலையால் பெருக்கி 60ஆல் வகுக்க வரும் ஈவு கலை. சேஷத்தை நீக்க வேண்டும். ஈவாகிய கலையை 9ஆல் வகுத்து ஈவை வைத்துக்கொண்டு சேடத்தை நீக்கி விடவும். மறுபடியும் சுதேசத்தின் பலபாவை 5ஆல் பெருக்கி வரும் தொகையில் முன் 9ஆல் வகுத்துவந்த ஈவாகிய கலையைக்கழிக்க வருவது சுதேசத்துக்கு அக்ஷாம்ஸம் ஆகும்.

உதாரணமாகச் சென்னைக்குப் பலபாவை 2·47. இதன் கலை 167 ஆகிறது. $167 \times 167 = 27889$. இதை 60 ஆல் வகுக்க $27889 \div 60 = 464$ ஈவு, மீதி 49 இதில் மீதி நீக்கி 464ஐ 9 ஆல் வகுக்க $464 \div 9 = 51$ ஈவு. மீதி 5. இதில் மீதி 5. நீக்கம், ஈவு 51 என்பது கலையாகும்.

பலபாவை மறுபடியும் 5 ஆல் பெருக்க $2.47 \times 5 =$ 13-55 இந்த பதின் மூன்று பாகை 55 கலையில் 51 கலையைக் கழிக்க 13-55—0-51=13-4 இந்த 13 பாகை 4 கலைகளும் சென்னைக்கு அக்ஷாம்ஸம் ஆகும்.

**பலச்சாயைகாண:—**

இவ்விதம் பலச்சாயை மூலம் அக்ஷாம்ஸம்காணுவதற்கு ஒவ்வொரு பிரதேசத்திலும் சென்று நிழலளவு எடுப்பதென் பது சாத்தியம் ஆகாதகாரியமாகும். பஞ்சாங்க கணித வல்ல வர்கள் உலகிலுள்ள நகரங்களுக்கெல்லாம் அந்த இடத்து அக்ஷாம்ஸத்தை பூகோள ஞானத்தால் அறிந்து அந்தந்த நக ரங்களுக்கும் பலபாவைக் கணக்கிட்டுள்ளனர். அது எவ்வித மெனில் அக்ஷாம்ஸத்துக்கு மகஜா உண்டாக்கி அதை 12ஆல் பெருக்கி வைத்துக்கொண்டு, மறுபடியும் அக்ஷாம்ஸத்துக்குக் கோடிஜா உண்டாக்கி முன் பெருக்கி வந்ததொகையைக் கோடிஜாவினுல் வகுத்து வரும் ஈவு பலச்சாயையின் அங்கு லம் ஆகும். மீதியை 60 ஆல் பெருக்கிக் கோடிஜாவினுல் வகுத்து வந்த ஈவு வியாங்குலம். மீதி நீக்கம், இம்முறையால்

கணிக்கப்பட்டுச் சில பஞ்சாங்கங்களில் குறிப்பிடப்பட்டுள்ள தைக் காணலாம் அவ்விதம் கணிக்கப்பட்ட பலச்சாயை உப யோகித்து நாம் எந்த நகருக்கு வேண்டுமானுலும் இராசி மானம் கணித்துக் கொள்ளலாம். மற்றும் அகஸ் என்று சொல்லப்படுவது யாது எனக்கவனிப்போம்.

**அகசு:-**

அகஸ் என்பது நாழிகையாகும். ஒவ்வொரு நாளும் இரவு, பகல் நேரங்கள் 30 நாழிகை சரியாய் இருப்பதில்லை. ஏற்றக் குறைவாக இருக்கும். இதற்குக் காரணம் பூமி23½° சாய்ந்து இருப்பதால் சூரியபிரகாசம் எப்போதும் ஓரளவாய்ப் படாமல் சித்திரை மாதம் முதல் புரட்டாசி மாதம் வரை பூமியின் வட பாகத்தில் அதிகமாகப் படுவதாலும், ஐப்பசி மாதம் முதல் பங்குனி மாதம் வரையில் பூமியின் தென் பாகத் தில் அதிகப்படுகிறதாலும், பூமி சரிவின் பேதத்திற்குத் தக்க படி பகல், இரவு நாழிகைகள் வித்தியாசப்படுகின்றன-

இந்த அகஸ் அல்லது பகல் நாழிகையை இரவு பகல் சம மாக இருக்கிற காலமாகிய மார்ச்சு மீ 21உ க்குச் சரியாகிய பங்குனி மாதம் 8உ முதலும் (மேசாயனம் முதல்) செப்டம் பர் மாதம் 22 ஆம் தேதிக்குச் சரியாகிய புரட்டாசி மாதம் 8உ முதலும் (துலாயனம் முதல்) தேதி வாரியாகக் கணித்துப் பஞ்சாங்கத்தில் போடப்பட்டுள்ளது. ஒரு நாள் பிரமாண மாகிய 60 நாழிகையில் இந்த அகஸ் நாழிகை போக மீந்தது அன்று இரவின் நாழிகையாகும். மற்றும் இதன் தொடர்-புள்ள அயனும்ஸம், சூரிய அயனம், பஞ்சாங்க சூரியஸ்புடம் முதலானவை தொடர்ந்து எழுதப்பெறும்.

———

(தொடரும்)

# அப்பரும் அமணரும்

திரு. ந. குமாரசாமி அவர்கள்,
C/o. ஆ. நடராஜ பிள்ளை,
வேளாளமைய்வீதி.
மேலப்பாளையம்.

---

உலகம் ஒரு நாடகமேடை. நாமெல்லோரும் நடிகர்கள். இறைவன் ஆட்டுவிக்கிறான். நாமெல்லாரும் ஆடுகிறோம். ஆட்டிவித்தால் ஆடாதார் ஆருமுண்டோ. அப்படி ஆடுகின்ற காலத்தின் கண் அடிகள் திருநாவுக்கரசரையும், அவர்கட்கு இடர் பல விளைத்து கடைசியில் கழு ஏறிய அமணர்களைப் பற்றியும் இவண் காண்போம்.

அப்பரடிகள் நடுநாட்டில் திருவாமூரில் வேளாள மரபில் தந்தைப் புகழனார்க்கும், தாயார் மாதினியார்க்கும், சித்திரைத் திங்களில் சதயத் திரு நட்சத்திரத்திலே தோன்றினார். இளமையிலேயேப் பெற்றோரை இழந்தார். அவர்கட்கு மேலாய், அம் பொன்மணி நூல் தாங்காது அனைத்துயிர்க்கும் அருள் தாங்கிய அம்மையார் திலகவதியார் அவர்கள், அடிகளை அன்புடன் வளர்த்து வந்தார். அடிகள் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்தார். முதலில் ஆருகத மதத்தை அடிகள் பற்றினார். பற்றின மதம் அவரைப் பாழ் படுத்தி விட்டது. எவ்வாறு? சூலை நோய் மூலம், அழியா நோய் அடிகளைப் பற்றிக் கொண்டதை யுணர்ந்த அமணர்கள் பலவேதங்கள் கூறி தீர்த்தம் அளித்தனர். பலனற்றது கண்டு பீலியார் தடவிக்கொடுத்தனர். தடவிக் கொடுக்கக் கொடுக்க மெய் வெந்தனலில் வேவது போன்றிருந்தது அடிகட்கு. அமணர்கள் அடிகளை விட்டனர்.

கொல்லாத சூலை நோய் குடர் முடக்கித் தீராமல் எல்லாருங் கைவிட்டார். இதுசெயல் 'என் முன் பிறந்த நல்லாள்

பால் தெரிவிக்க' என்ருர். அங்ஙனம் தெரிவித்ததற்கு, அமண் பள்ளிக்கு யாம் வருவோம் அல்லோம் என்று மறுமொழிப் பகர்ந்தார். பகர்ந்ததைக் கேட்ட வாகீசர் இதற்கினி யான் என் செய்வேன் என்று தடுமாறி திருவதிகை எம்பெருமான் கோயில் சென்று சார்ந்தார். எல்லாம் வல்ல இறைவன் திரு நீற்று மூலம் அருமையாய் அகற்றினுர் அடிகள் நோயை.

இது கண்ட அமணர்கள் தம்சமயம் அழியும்நேரம் வந்து விட்டதை யுணர்ந்தனர். மதம் விட்டு மதம் மாறிய மா பாத கன் என்று அரசரிடம் போதை யூற்றி அடிகளைக் கொல்லச் சதிசெய்தனர். ஏற்றப்பட்ட போதையில் செய்வதறியாது திகைத்த பல்லவனை, 'அப்பரடிகளை இவண் இட்டுவருக' என்று பணித்தனர் அமணர்கள். பணித்தவர் அடிபணித்து அப்பல்லவன் அப்பரை அழைத்து வரப்பணித்தான். ஆனுல் அடிகளோ "நாமார்க்கும் குடியல்லோம்" என்றெடுத்து நான்மறையின் கோமானை தேமாலைச் செந்தமிழின் செழுந் திருத் தாண்டகம் பாடி 'ஆமாறு நீரழைக்க அடைவிலம்' என்ருர். பல்லவனும் அதுகேட்டான். பாங்கிருந்த பாயுக்கை வல்லமணர் தமை நோக்கி 'மற்றிவனைச் செய்வதென் பகரீர்' என்று அறத்தினைத் துறந்தான். தமக்குறுதி யறியாத புல்லறி வோர் அஞ்சாது அடிகளை நீற்றறையில் இடப் புகன்ருர்.

'அவ்வாறே செய்க'என்று பெருகுசினக் கொடுங்கோலன் மொழிந்தான். அம்பல வாணனின் சிந்தையராய் சென்ருர் நீற்றறையில். நீற்றறையோ "மாசில் வீணையும்; மாலை மதியமும்; வீசு தென்றலும்; வீங்கிள வேனிலும்: பொய் கையும் போன்றிருந்தது அடிகட்கு. ஓரேழு நாள் கழித்ததற் பின் உணர்வில் அமணரை அழைத்துப் 'பாரும் இனி நீற்ற றையை' என்று பணித்தான். தேருநிலை இல்லாதார் திறந் தனர் நீற்றறையை. அடிகளை ஆனந்த நிலையிற் கண்டனர் அமணர்கள். முன்னைச்சமண் செய்த சாதகத்தால் இது செய்து பிழைத்திருந்தான் என வேந்தர்க் குறை செய்து; மதியற்ற அமணர்கள், மதி செய்வதினிக் கொடிய வல்விட முட்டுவ தென்று மொழிந்தனர். விடம் கொடுக்கப்பட்டது. அடிய வர்க்கோ விடம் அமிர்தமானது.

இதுகண்ட சமணர்கள் வெருக்கொண்டு தம் சமயத்தில் விடந்தீர் தஞ்சமுடை மந்திரத்தால் சாதியாவகை தடுத்தான். ஆகவே இவர் மீது கடக்களிற்றை விட ஏவினர். அவ்வாறே மதிகெட்ட மன்னவனும் ஏவினன் கொல் களிற்றை. கூற்றுவன் ஒருவனைப்போல் மாடத்தை இடித்து, மண்டபத்தை ஒடித்து வந்தது வேழம். அண்ணல் அருந்தவ வேந்தர் ஆனை தம்மேல் வரக்கண்டு "சுன்ன வெண் சந்தனச் சாந்து" தொடுத்த திருப்பதிகத்தை மண்ணுலகுய்ய எடுத்து மகிழ்வோடு பாடுகின்றூர். தண்டமிழ் மாலைகள் பாடி தம் பெருமான் சாணுகக் கொண்ட கருத்தில் இருந்து குலாவிய அன்புறு கொள்கைத் தொண்டரை முன் வலமாக மூன்று முறை வந்ததைக்கண்டனர்.

தம் சமயம் அழியும் என்றெண்ணி பேதமையால் பாழும் சைவத்தைக் கடலிடுவோம் என்றெண்ணி அடியாரை கல்லில் கட்டி பாசம் பிணைத்து கடலில் இடுக என்று புகன்றனர். அவ்வாறே செய்யப்பட்டது. ஆனுல் அடிகள் "சொற்றுணை வேதியன்" பதிகம் பாட கல் கடலில் மிதந்தது. என்னே! அற்புதம். ஐந்தெழுந்தின் மகிமை இதுவன்றே. இங்ஙனம் பல இடர்விளைத்தப் பாதகர்கள் ஒழிந்தனர். பல்லவன் பார் போற்ற சைவனுனன். இங்ஙனம் இடர் பல பெற்றும் நலம் சிறிதும் குறைவின்றி இருந்த அடியார் நாவுக்கரசரின் நெறி வாழ்க.

---



## சிதம்பரத்தில் பாண்டிநாயகம் நந்தனவன பராமரிப்பு நிதி நிலப்பெறுமானம் ரூ. 20,200/-

'நீநாளும் நன்னெஞ்சே நினைகண்டாய்
பூநாளும் தலைசுமப்பப்.....பெறலாமே நல்வினையே,
'கட்டலர்த்த மலர் தூவிக் கைதொழுமின்,
'பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்துபாடி,
'மொட்டறு மலர்பறித் திறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்
பரகதி கொடுத்தருள் செய்யும்,
'போதுகளும் கொய்து பூந்தார் மாலை
கண்ணி பலசமைத்துப் புகழ்ந்து பாடித்
தீதில் திருவிளக்கிட்டுத் திருநந்த வனமும் செய்து' – என்று

இன்னோரன்னவாறு சாத்திர தோத்திரப் பாடற் பகுதிகளான் திருநந்தவனம் அமைத்து இறைவற்குப் பூக்களைச் சூட்டுதலாகிய சரியைத் தொண்டு செய்தல் அறியப்பெறும். 'துவக்கில் நன்மலர் தொடுத்தால் தூயவிண்ணேறலாகும்' என்பர் திருநாவுக்கரசர். அறுபான் மும்மை நாயன்மார்களில் ஒருவராகிய முருகநாயனாரும் 'கோட்டுமலரும் நிலமலரும் குளிர்நீர்மலரும் கொழுங்கொடியின் தோட்டுமலரும்' கொணர்ந்து இறைவற்கு'இண்டைச் சுருக்கம் நாமமுடன் இணைக்கும் வாசமாலைகளும், தண்டில் கட்டும் கண்ணிகளும், தாளில் பிணைக்கும் பிணையல்களும், நுண்தாதிறைக்கும் தொடையல்களும்'' தொடுத்துத் திருவைந்தெழுத்தோதிச் சாத்தும் பணியில் தலைசிறந்தார். இங்ஙனம் நந்தவனம் அமைத்து இறைவற்குப் பூந்தாமம் சாத்தும் சிவபுண்ணியச் செயலை நாடோறும் தில்லையில் நிகழ்த்துவித்தற் பொருட்டு 4–9–1967ந் தேதி சிதம்பரத்தில் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவு கோ சம்வர்த்தன நந்தனவன உதவி நிதியும் ஏற்படுத்தப்பெற்றுள்ளது. இனி, சிதம்பரம் ஸ்ரீ நடராசப் பெருமான் ஆலயத்திலுள்ள பாண்டிநாயகம் திருக்கோயிலைச் சுற்றிலும் உள்ள நந்தனவனத்தைப் பராமரிப்பதற்கு இந்நிதி திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்றது. இது 'சிதம்பரத்தில் பாண்டிநாயகம் நந்தனவன பராமரிப்பு நிதி'' எனப்பெறும்.

2. இதன் சேர்க்கையில் விளக்கம் கண்டிருப்பதும், நமக்குச் சொந்தமானதும், நம்பேரில் பட்டா மிராசுடன் நாம் அனுபவித்து வருகிறதுமான தஞ்சாவூர் ஜில்லா கும்பகோணம் தாலுக்கா குறிய மூலை கிராமம் சர்வே. 179-நஞ்சை

5 ஏக்கர், 16 செண்ட் நிலத்திலிருந்து கிடைக்கும் வருமானத்தில் சர்க்கார் கிஸ்தி, சிப்பந்திகள் செலவு, கிராம சமுதாயச் செலவு, மராமத்துச் செலவு, இத்தருமத்தை நடத்துவதற்குரிய நிர்வாகச் செலவு போக எஞ்சிய தொகை முழுவதும் இதிற்குறித்த தருமத்திற்குச் செலவிடப்பெற்றுவரும்.

3. அ. நம்மால் சிதம்பரத்தில் பின்வரும் தருமங்கள் நடைபெறுகின்றன. பெரியபுராணப் பிரசங்கநிதி, திருவாசகப் பிரசங்கநிதி ஏற்படுத்தப் பெற்று ஆடிச் சுவாதியை யொட்டிப் பெரிய புராணப் பிரசங்கங்களும், ஆனி மகத்தையொட்டித் திருவாசகப் பிரசங்கங்களும் நிகழ்த்தப் பெறுகின்றன.

சைவசித்தாந்தம் பரப்ப அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் ஸ்ரீ அருணந்தி சிவாச்சாரியார் நினைவு சிவஞான சித்தியார் உபந்நியாசக் கட்டளையும் சைவசித்தாந்த உபகாரச் சம்பள நிதியும் ஏற்படுத்தப்பெற்றுள்ளன.

சிதம்பரம் உயர்நிலைப்பள்ளி மாணவர்களுக்கு உணவளிக்கவும், மார்கழித் திருவாதிரை ஆனி உத்தரம் நாட்களில் அன்னம்பாலிக்கவும், ஆவணி மூல நாளில் அன்னம்பாலிக்கவும், நித்திய மகேசுவரபூசை நடத்தவும், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாளில் அன்னம்பாலித்தற் பொருட்டும், மார்கழித் தேர்த்திருவிழா நாளில் மகேசுவரபூசை நடத்தவும், தில்லைவாழந்தணர்களுக்கு மார்கழித் திருத்தேர்விழா நாளிலும் ஆனித் திருமஞ்சன நாளிலும், மாசி, பங்குனி, சித்திரை மாதங்களில் ஒவ்வொரு நாளிலும் சிறப்பு அன்னம்பாலிப்பு நடத்தவும் நிதிகள் ஏற்படுத்தி அன்னம்பாலிப்பு நடத்தப் பெற்று வருகிறது.

பல்லாண்டு விளக்கு நிதியின்படி மார்கழித் திருவாதிரைத் தேர்த்திருவிழாவில் ஸ்ரீ பல்லாண்டு ஓதுதலும், மாணிக்கவாசகர் நினைவுத் திருவாசகப் பரிசுகள் உயர்நிலைப்பள்ளி மாணுக்கருக்கு அளித்தலும், இராஜராஜ அபயகுலசேகர சோழன் நினைவுத் தேவார வைப்பு நிதியின்படி ஓதுவார் ஒருவர் 'சிவ சிவ' ஒலிமண்டபத்தில் தேவாரம் நாடோறும் ஓதுதலும், ஆடிச் சுவாதியில் இன்னிசைத் தேவார நிதிக்கேற்ப ஆடிச் சுவாதி நாளில் இரவு முழுவதும் தேவார கோஷ்டி நடத்தலும் நடைபெறுகின்றன.

திருப்பல்லாண்டும், சிவபுராணமும் சலவைக்கல்லில் நம்மால் பதிக்கப்பெற்றுள்ளது. தேர்க்குத் தேர்ச்சீலையும் கொட்டகையும் அமைக்கப்பெற்றுள்ளது. நடராச சபைக்கதவு

அருகாலுக்கு வெள்ளித் தகடு அமைத்திருக்கிறது. நடராசப் பெருமானுக்குத் தங்கத் தாம்பாளம் அளிக்கப்பெற்றுள்ளது. திருநீலகண்டர் நினைவில் தண்ணீர்ப் பந்தர் தருமம் நடை பெறுகின்றது. பொன்னம்பலத்தில் நாடோறும் நெய் விளக்கு வைக்கப்பெற்று வருகிறது. மார்கழித் திருவாதிரையிலும், ஆவணி, புரட்டாசிமாச நடராசாபிஷேக நாட்களிலும், திரு மஞ்சனத் திருத்தொண்டு புரியும் தில்லைவாழந்தணர்களுக்கு அபிஷேகப் பரிசு அளிக்கப்பெறுகிறது. பூசைமுறையுடைய தில்லைவாழந்தணர்களுக்குப் படிக்காசு அளிக்கப்பெறுகிறது. சிவகங்கைக் கரையில் திருவாசகம் முழுவதும் பாடல்கள் 658-ம் சிலாசாசனம் செய்து அமைக்கப்பெற்றுள்ளது. சிதம் பரத்தில் கோ சம்வர்த்தன நந்தனவன நிதி ஏற்படுத்திப் பசுக் களைப் பராமரித்து நடராசாபிஷேகத்திற்கு நாடோறும் பால் அளிக்கப் பெற்று வருகிறது.

ஆ. சிதம்பரம் ஸ்ரீ நடராசப் பெருமான் ஆலயத்தில் பாண்டிநாயகம் கோயிலைச் சுற்றி ஒரு நந்தவனம் இருக்கிறது. மேல்பாரா 2-ல் குறித்துள்ள நிலவருமானத்தில் நிகர வருமா னம் முழுவதும் சிதம்பரம் ஸ்ரீ நடராசப்பெருமான் ஆலயத் தில் மேற்படி பாண்டிநாயகம் கோயில் நந்தனவனம் பரா மரித்தற் பொருட்டு நம்மால் செலவிடப்பெற்றுவரும்.

4. மேற்படி வருமானம் வேறு எம்முறையிலும் செலவு செய்யப்பெறமாட்டாது. இத்தருமத்துக்கென ஒதுக்கப்பெற்ற நிலங்கள் நம்பேரிலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் சுவாதீனத்திலும் பரிபாலனத்திலும் இருந்துவரும்.

5. இந்த நிலங்களின் மதிப்பு ரூ. 20,200/- உத்தேச வருஷ வருமானம் ரூ. 700/-.

**ஷெடியூல்:-**

தஞ்சாவூர் ரிஜிஸ்தரேஷன் டிஸ்டிரிக்ட்டு திருவிடை மருதூர் சப் ரிஜிஸ்தரைச் சேர்ந்த கும்பகோணம் தாலுக்கா 44-நீ. சூரியமூலை கிராமத்தில்;-

சர்வே நெ. 179. நஞ்சை. பழவாற்றுக்கு மேற்கு, வடக்கு, நமது நன்செய்க்குக் கிழக்கு, கண்டியன் பழவாற்றுக்குத் தெற்கு இந்த நான்கெல்லைக்குட்பட்ட நன்செய் நிலம் ஏக்கர் 5., செண்ட் 16.

Tirupanandal
Dated 8-10-1968 } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran*

Registered at the Sub Registrar's Office Tiruvadamarudhur on 9-10-1968, as document No. 2214 of Book 1 vol. 1290 pages 203-207

## திருப்பனந்தாள் — ஸ்ரீ காசி மடம்

# 'திருமுறை வெளியீடுகள்'

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| 1 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | 3 | 50 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிச்செய்த காசிக்கலம்பகம் மூலமும் அரும்பதக்குறிப்பும் | 0 | 40 |
| 3 | .. சிதம்பர மும்மணிக்கோவை .. ... | 0 | 20 |
| 4 | .. மதுரைக்கலம்பகம் .. ... | 0 | 40 |
| 5 | .. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் .. .. | 0 | 60 |
| 6 | திருச்செந்தூர்க் கந்தர்கலிவெண்பா-மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்-மதுரைக்கலம்பகம்-நீதிநெறி விளக்கம்-மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை-மதுரை மீனாட்சியம்மை குறம் ... | 2 | 75 |
| 7 | திருவாரூர் நான்மணிமாலை-முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் ... | 1 | 25 |
| 8 | சிதம்பர மும்மணிக்கோவை-சிதம்பரச்செய்யுட் கோவை தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | 1 | 00 |
| 9 | பண்டார மும்மணிக்கோவை-காசிக்கலம்பகம் சகலகலாவல்லி மாலை ... | 1 | 00 |
| 10 | சிதம்பரச் செய்யுட்கோவை ... | 0 | 75 |
| 11 | நீதிநெறி விளக்கம் - ஆங்கிலமும், ஹிந்தியும் ... | 0 | 50 |
| 12 | .. - மூலம் ... | 0 | 10 |
| 13 | நீதிநெறி விளக்கமும் நன்னெறியும்-மூலம் ... | 0 | 15 |
| 14 | கந்தர்கலி வெண்பா மூலம் மட்டும் ... | 0 | 10 |
| 15 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் ... | 3 | 00 |
| 16* | மூவர் தேவாரம் அடங்கன்முறை - தலமுறை .. | 8 | 75 |
| 17* | சுந்தரர் தேவாரம் .. ... | 1 | 30 |
| 18 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் மூலம் மட்டும் ... | 0 | 56 |
| 19* | .. .. தெளிவுரை ... | 1 | 50 |
| 20* | பதினோராம் திருமுறை ... | 1 | 50 |
| 21* | ஒருதுறைக்கோவை ... | 1 | 75 |
| 22* | அகத்தியர் தேவாரத்திரட்டு ... | 0 | 36 |
| 23 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி ... | 0 | 25 |
| 24 | திருக்கைலாய ஞானவுலா-உரையுடன் ... | 0 | 50 |
| 25 | திருக்கயிலைத் திருமுறை ... | 0 | 37 |
| 26 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் ... | 0 | 19 |
| 27 | பழமொழித்திருமுறை ... | 0 | 25 |
| 28 | அப்பர்விழா வெளியீடு ... | 0 | 25 |
| 29 | Hymns and Proverbs ... | 0 | 30 |
| 30 | திருவாரூர்-திருப்பனுவல்கள் ... | 0 | 10 |
| 31 | திருவாரூர் நான்மணிமாலை ... | 0 | 50 |

Registered With the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485/57.
Regd. No M. 5574



| | | | |
|---|---|---|---|
| 32 | திருத்தொண்டர் புராணசாரம் | ... | 0 40 |
| 33 | திருவிளையாடற்புராணம் உரை நடை | ... | 2 25 |
| 34 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம் மட்டும்) | ... | 1 75 |
| 35 | கந்தபுராணம்-முதல் மூன்று காண்டங்கள்(மூலம்மட்டும்) | | 2 75 |
| 36 | .. யுத்த தேவ காண்டம் | ... | 2 00 |
| 37 | .. தக்ஷகாண்டம் | ... | 1 50 |
| 38 | கந்தபுராண உரைநடை | ... | 3 00 |
| 39 | கந்தர் அலங்காரம் குறிப்புரையுடன் | ... | 0 25 |
| 40 | கந்தர்கலிவெண்பா சகலகலாவல்லிமாலை ஆங்கிலம் ஹிந்தி மொழிபெயர்ப்புடன் | .. | 1 25 |
| 41 | ஐந்து நீதி நூல்கள் | ... | 0 10 |
| 42 | நவக்கிரகமாண்பு | ... | 0 25 |
| 43 | ஸ்ரீ சயிலம் | ... | 0 10 |
| 44 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... | 0 37 |
| 45 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி | ... | 0 10 |
| 46 | திருக்குறள் அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... | 1 50 |
| 47 | திருக்குறள்-பொருட்பால் .. | ... | 2 50 |
| 48 | திருக்குறள் - காமத்துப்பால் .. | ... | 1 00 |
| | ஷை 47, 48, 49 திருக்குறள் 3புத்தகமும் | ... | 4 00 |
| 49 | திருவருட்பயன் மூலம் இந்தி, ஆங்கில மொழிபெயர்ப்புடன் | | 1 00 |
| 50 | திருக்குறள் பரிமேலழகர் உரையுடன் கூடியது (முப்பாலும் சேர்ந்து) | ... | 2 25 |
| 51 | திருக்குறள்-உரைக்கொத்து-பொருட்பால் 2-ம் பதிப்பு | | 2 75 |
| 52 | தாயுமானசுவாமிகள் பாடல் குறிப்புரையுடன் | ... | 1 25 |
| 53 | குமரகுருபரர் வரலாறும், அற்புதத்தேவாரத்திரட்டும் | ... | 0 30 |
| 54 | திருக்குறள்-பொருட்பால்-பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... | 0 13 |
| 55 | செந்திலாண்டவன் மகிமை | ... | 0 1[illegible] |

மேலே கண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:,

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்.

"தியாகராஜ விலாசம்" 53. பிள்ளையார் கோயில்தெரு.
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை-5

குறிப்பு: * இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீல[illegible] காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்ன[illegible] திருமுறைப் பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் எ[illegible] 51, 52 தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'கு[illegible] குருபரன்' பத்திரிகையைச்சாரும்'

அச்சிட்டது:- குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம்-68'.